

பண்டித மோத்திலால் நேரு அவர்கள்.

இவர் வரப்போகும் கல்கத்தா காங்கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றிருக்கிறார்.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



| தொகுதி 14 | விபவஹூ ஐப்பசிமீ கஉ<br>1928ஹூ அக்டோபர்மீ 17உ | பகுதி 4 |
| --- | --- | --- |

## கடவுள் வணக்கம்.

எல்லா மறிந்தவரு மேதுமறி யாதவரு
மில்லையெனு மிவ்வுலகமீ
தேதுமறி யாதவ னெனப்பெயர் தரித்துமிக
வேழைக்கு ளேழையாகிக்
கல்லாத வறிவிற் கடைப்பட்ட நானன்று
கையினு லுண்மை ஞானம்
கற்பித்த நின்னருளி னுக்கென்ன கைம்மாறு
காட்டுவேன் குற்றேவனுன்
அல்லார்ந்த மேனியொடு குண்டுகட் பிறையெயிற்
றுருபாச வடிவமான
அந்தகா நீயொரு பகட்டாற் பகட்டிவெ
தட்டாதடா காசு நம்பாற்
செல்லாதடா வென்று பேசவா யதுதந்த
செல்வமே சத்தாகி யென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

---

செம்பொன் மேனிச் செழுஞ்சுட ரேமுழு
வம்ப னேனுனை வாழ்த்து மதியின்றி
இம்பர் வாழ்வினுக் கிச்சைவைத் தேன்மனம்
நம்பி வாவெனி னென்கொல் செய்வதே.

---

இரும்பைக் காந்த மிழுக்கின்ற வாறெனைத்
திரும்பிப் பார்க்கவொட் டாமற் றிருவடிக்
கரும்பைத் தந்துகண் ணீர்கம் பலையெலாம்
அரும்பச் செய்யென தன்னையொப் பாமனே.

# அரும்பொருள் விளக்கம்.

1. இதனால் அடிகள் தம்மை ஆட்கொண்டருளிய கருணைத் திறத்திற்கு வேறு கைம்மாறு இன்றெனத் தம்மாட்டு நிறைந்துள்ள அன்பின் பெருக்கை வெளியிடுகின்றார்.

(இ-ள்) "கருநிறம் படைத்த உடம்பையும், திரண்ட பெரிய கண்களையும், பிறைச் சந்திரனைச் செருகிவைத்தாற் போன்ற வக்கிர தந்தங்களையும், கண்டோர்க்கு அச்சந்தரும் பயங்கரமான விகாரத் தோற்றத்தையுமுடைய எமனே! நீ எருமைக்கடா வாகனத்தைக் கொண்டு மயக்குவது தகாது" என்று அஞ்சாமையோடு அதட்டிப் பேசும் செல்வாக்குக் கொடுத்த செல்வமே! (நிதியே) உண்மையாகி என் உள்ளத்தின்கண் குடிகொண்டிருக்கிற ஞான வடிவான கடவுளே! ஒளி மயமான இன்பமே! முழுது முணர்ந்தவரும் ஒன்றுமே தெரியாதவரும் இல்லை என்னும்படியான இந்த உலகில், ஒன்றுமறியாதவனென்று பெயர்பெற்று அறிவிலிகளுக்குள் பெரிய அறிவிலியாகிக் கற்பனவற்றைக் கல்லாமையால் கடையாகியவனும், குற்றேவற்குரியவனுமாகிய நான், அக்காலத்தில் சின்முத்திரை வடிவான கை அமைப்பு மாத்திரத்தில் மெய்ஞ்ஞானம் ஊட்டியருளிய நின் கருணைத் திறத்திற்கு யாது பிரதியுபகாரம் செய்யவல்லேன் என்பதாம்.

எல்லாமறிந்தவர் கடவுள்; முழுதுமுணர்ந்தவர் மக்களுக்குள் ஒருவருமிலர்; எனினும் தந்தம் சிற்றறிவிற்கேற்ப ஒவ்வோர் துறையில வல்லுநராயிருப்பாராதலின் "எல்லாமறிந்தவரு மேதுமறியாதவருமில்லை" என்றார். இவ்வகையில் தாம் ஒன்றுமே தெரியாதவர், தக்க கல்வி ஞானம் இல்லாதவரென்பார் "ஏழைக்குள் ஏழையாகிக் கல்லாத அறிவிற் கடைப்பட்ட நான்" என்றார். கையினால் உண்மை ஞானங் கற்பித்தல்—சின்முத்திரை காட்டி ஞானங் கொளுத்தல். குறறேவல் நான்—குற்றேவற்குரிய நான் என விரிக்க. திருவருட்பேறு பெற்றோர் நமனுக் கஞ்சாராகலின் "அந்தகா! நீ ஒரு பகட்டாற் பகட்டுவதடாதடா" என்றனர். பகட்டால்—எருமைக் கடாவால்; வெளிவேடத்தால் என்னும் பொருள்நயம் தோன்றுதலுங் காண்க. பயங்காட்டிக் கொடுமைசெய்யுந் தொழில் எம்மிடம் பலியாது என்பார் "காசு நம்பாற் செல்லாதடா" வென்றார். இது அலட்சியக் குறிப்பில் வழங்குவதோர் உலகவழக்குப் பழமொழி.

2. இதனால் வலியவந்து தம்மை ஆட்கொள்ளின் செய்யக் கிடந்தது யாது என்பதைக் கூறுகிறார்.

வம்பன்—துஷ்கிருத்தியங்களைச் செய்வோன். இம்பர்—இவ்வுலகம். மனம் நம்பி என்றது உள்ளத்தின்கண் பரம்பொருளாகிய தம்மையே பூரண ஆதாரவாகக்கொண்டு நம்பிக்கை வைத்து என்றபடி. உலகபந்தங்களிலேயே சிக்குண்டு மறுமை இன்பத்தை மதியாமல் உழலும் தம்மை இறைவன் வலிய வந்து தடுத்தாட்கொள்ளுங் காலத்தும் சுதந்தரம் பாராட்டக் கூடுமோ என்பார் "மனம், நம்பி வாவெனி லுனென்கொல் செய்வதே" என்றார்.

3. இதனால் திருவடி தந்து தம்மை ஆட்கொள்ளுமாறு வேண்டுகிறார்.

யான் ஒன்றும் செய்யவல்லேன் அல்லேன்; தேவரீரே வலியத் தடுத்தாட்கொள்ளவேண்டுமென்பார் இரும்பைக் காந்தம் இழுத்துக்கொள்ளும் உவமையைக் காட்டினார். திருவடிக் கரும்பு—திருவடியாகிய கரும்பு. கம்பலை—மெய் நடுக்கம். மனே—மன்னே என்பதன் தொகுத்தல்.

*




## சமத்துவ உரிமை.

இந்தியா விழித்துக் கொண்டது. தேசமெங்கும் சுதந்தர முழக்கம்! சீர்திருத்தப் பேச்சு! சுயமரியாதைக் கிளர்ச்சி! இத்தகைய உணர்ச்சி ஆங்கிலக் கல்வியின் பலனாக எழுந்தது எனக் கூசாது கூறலாம். தற்கால உலகில் மேனாட்டுப் புதிய கொள்கைகள் பெரிதும் மதிக்கப்படுகின்றன. மேனாட்டாருடைய சமூக ஒழுக்க வழக்கங்களுள் சில நமக்குப் பொருந்தாமல் இருக்கலாம். மக்கட்குச் சமஉரிமை வழங்கவேண்டும், சுதந்தரமாக வாழவேண்டும், ராஜீய அமைப்பும் நிர்வாகமும் குடிகள் கையில் இருக்கவேண்டும் என்று அவர்கள் கடைப்பிடித்துள்ள உண்மைகள் மிகுதியும் போற்றத்தக்கன. சமூக ராஜீய அபிவிருத்தி விஷயத்தில் மற்றைத் தேசங்களோடு இந்தியாவை எவ்விதத்திலும் ஒப்பிட முடியாது. நமது நாட்டை எல்லோரும் ஒரு சந்தைக்கடையாகவே உபயோகப் படுத்திக்கொண்டிருக்கின்றனர். நாமும் தினசரி வாழ்க்கைக்கு வேண்டுவனவற்றிற்கெல்லாம் அந்நிய நாடுகளையே எதிர் பார்க்க வேண்டிய நிலைமையிலிருந்து வருகிறோம். உலக வர்த்தகமோ பெரிய கைத்தொழில் ஸ்தாபனங்களோ சாஸ்திரீயமான விவசாய முறைகளோ நம் நாட்டிற்கு இன்னும் அந்நியமாகவே இருக்கின்றன. இவற்றை ஸ்திரமாக ஏற்பாடு செய்யத்தக்க கூட்டுறவுத் தத்துவம் மக்கள் தெரிந்துகொள்ளவில்லை. இவற்றை வளர்க்குங் கல்வி முறை நமது நாட்டில் இல்லை. இப்போது அநுஷ்டானத்திலிருந்துவரும் படிப்புமுறை சர்க்கார் உத்தியோகங்களுக்குத்தான் பயன்படுகிறது. நாட்டின் அறிவைப் பெருக்கி வறுமையைப் போக்குவதற்கான திட்டங்கள் சட்டசபைகளில் வரும்போது பணமுட்டு குறுக்கே

வந்துவிடுகிறது. அங்கத்தினர்கள் மூச்சுவிடாமல் அடங்கிக் கொள்ள வேண்டியவர்களாகவே யிருக்கிறார்கள். இந்திய அரசியல் நிர்வாகம் வருவாய்க்கு மீறிய செலவில் நடைபெறுகிற தென்றே சொல்ல வேண்டும். 'தீவிர தேசிய' வாதிகள் அன்னிய ஆதிக்கத் தைத் தொலைப்பதே இவற்றிற்கெல்லாம் மருந்து என்கிறார்கள். நமக்குள்ளேயே சமத்துவ உரிமையின்றி எவ்வாறு அன்னிய ஆதிக்கத்தை ஒழிப்பது? என்பதுதான் எமது கேள்வி.

நமது புகழ்படைத்த பாரத அன்னையின் திருமேனியில் சாதி சமய சம்பிரதாயங்கள் வேற்றுமை என்னும் பெருங்கழலையைத் தோன்றச்செய்து நீண்டநாட்களாகத் துன்பம் செய்து வருகின் றன. இந்த நோயை எவ்வளவு மூடிவைத்தாலும் பெருந்துன்பத் துக்கே காரணமாகும். ஆதலால் அதைக் கீறிவிட்டு ஆற்ற வேண்டியதுதான் பாரத மக்களுடைய முதற்கடமை யாகும். வேதங்களிலும் உபநிடதங்களிலும் ஜாதிசமய வேற்றுமை கிடையா தென சாஸ்திர விற்பன்னர் முடிவுகட்டி யிருக்கின்றனர். ஆரிய ருள்ளும் வருணப்பாகுபாடு பிற்காலத்தில் அவசியங் கருதி ஏற் பட்டதாகும். நாளாவட்டத்தில் அதில் சுயநலம் புகுந்து சமரசத் தைக்கெடுத்துவிட்டது. கோக்கலே, திலகர், காந்தியடிகள் சதாசிவ ஐயர் போன்ற உத்தமர்கள் இவ்வுண்மையை அப்படியே ஒப்புக் கொள்ளுகின்றனர். தமிழ் நாட்டிற்கு இவ்வருணாசிரமக் கொள்கை மிக மிகப் புதிய விஷயமாகும். பண்டைய சங்க இலக்கியஇலக்கணங் களை ஆராய்வோர் இவ்விஷயத்தை நன்கு உணர்வர். ஆனால் இப் போதுள்ள பழைய இலக்கணமாகிய தொல்காப்பியத்திலேயே ஆரியக் கோட்பாடு சிறிது நுழைந்திருக்கிறது. இதனால் தமிழகத் திற்குள் ஆரிய நாகரிகம் எப்போது வந்தது என்ற விஷயத்தைத் தீர்மானிப்பது சரித்திர வல்லார்க்குக் கஷ்டமான காரியமாகவே இருக்கின்றது. பொருளிலக்கணம் தமிழ் மொழிக்கே சிறப் புரிமை வாய்ந்தது. மற்றெம்மொழியிலும் இது கிடையாது. இந் தப் பொருளிலக்கணம் தமிழ்நாட்டு மக்களுடைய பழையசமத் துவ வாழ்க்கை முறையின் பிரதிபிம்பம் என்றே சொல்லலாம். சாதி சமயபேத நாற்றம் கொஞ்சமேனும் அதிற் காணமுடியாது. தமிழ்மக்கள் வகுத்துக்கொண்டு வாழ்ந்த முறைப்படி ஐந்து வகை நிலங்களிலும் வாழ்ந்த மக்களை அடியிற் குறிப்பிடுகின்றோம். நேயர் கள் உண்மை உணர்வாராக.

குறிஞ்சிநில மக்கள்:—கானவர், வேட்டுவர், குன்றுவர்—குறத்தியர், வேட்டுவித்தியர். தலைமக்கள்:—வெற்பன், சிலம்பன், பொருப்பன், கொடிச்சி.

முல்லை நில மக்கள்:—கோவலர், இடையர், ஆயர், பொதுவர்-இடைச்சியர், கோவித்தியர், ஆய்ச்சியர், பொதுவியர்-தலைமக்கள். அண்ணல், தோன்றல்.

மருதநில மக்கள்:—களமர், உழவர், கடையர்—உழத்தியர், கடைசியர். தலைமக்கள் மகிழ்நன், ஊரன், மனையோள்.

நெய்தல் நில மக்கள்:—நுளையர், திமிலர், பரதவர்—நுளைத்தியர், பரத்தியர். தலைமக்கள். சேர்ப்பன், துறைவன்.

பாலை நில மக்கள்:—எயினர், மறவர்—எயிற்றியர், மறத்தியர். தலைமக்கள். மீளி, விடலை, காளை.

மேற் குறிப்பிடப்பெற்ற எந்நில மக்களுள்ளும் பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர், சண்டாளர் ஒருவருமில்லை என்பது தெளிவாக விளங்கும். மிகப் பிற்பட்ட காலத்திய நம்பி அகப்பொருள் முதலிய அகப்பொருளிலக்கணங்களுள் இந்நான்கு வருணத்தவரும் இடைச்செருகி வைக்கப்பட்டிருக்கின்றனர். இவ் விஷயத்தை விரிக்கிற் பெருகும். மற்றொன்று விரித்தலாகவும் முடியும். மேற் கூறியவற்றிலிருந்து நாம் தெரிந்துகொள்ள வேண்டியது என்னவென்றால் ஜாதி மதபேத மானது தேவகட்டளை வேத கட்டளை அல்லவென்பதே யாகும். கால தேச வர்த்தமானங்களுக்கேற்ப ஏற்படும் மாறுதல்களுக்கு இடங்கொடுக்க மக்கள் கடமைப் பட்டிருக்கிறார்கள். பழைய வழக்கங்கள் சமத்துவத்தால் சித்திக்கும் புதிய முன்னேற்றங்கட்குத் தடைசெய்யாம லிருக்கவேண்டும். தற்காலம் எந்த வகையான அபிவிருத்திக்கும் இவை முட்டுக்கட்டையாக முன்னிற்கின்றன. தேசத்தில் எங்கு பார்த்தாலும் அடிமைப்புத்தியே மிஞ்சி நிற்கின்றது. சமத்துவ உரிமையின்றியே பல நூறாண்டுகள் வாழ்ந்து பழகிவிட்டபடியால் சமூக ராஜீய சுதந்தர இன்பத்தைப்பற்றி எவ்வளவு உபதேசம் செய்தாலும் ஜனங்களுக்கு ஏறுவதில்லை. சாதாரணமாக ஒரு கிராமத்திற்குச் சென்று பார்த்தால் இவ்வுண்மை விளங்கும். தாழ்த்தப்பட்டோர் தாங்கள் மற்றவர்கட்கு அடிமை செய்யவே உலகத்தில் ஜனனம் எடுத்திருப்பதாக நினைத்துக்கொண்டிருக்கின்றனர். "பரவா இல்லை! நீங்கள் தெருவில் வரலாம்; எங்களைத் தொடலாம்; கொஞ்சம் சுத்தமாயிருங்கள்; உங்கள் பிள்ளைகளைப் பள்ளிக்கூடங்கட்கு அனுப்புங்கள்; சேர்த்துக்கொள்ளுவார்கள்; சர்க்கார் உத்தரவே வந்திருக்கிறது" என்றால் "ஐயோ! இதென்ன இப்படிச் சொல்லுகிறீர்கள்! உங்கள் தெருவில் நடந்தால் உங்களைத்தொட்டால் சாமி சும்மா இருக்குமா? குடியைக் கெடுத்துப் போடாதா? அழுக்காக இருப்பது எங்கள்

ஜாதியாசாரம். எங்களுக்குப் படிப்பு என்ன செய்ய? பள்ளிக்கூடங் கட்குப் பிள்ளைகளை அனுப்பினல் குடியானவர்களும், கிராமாதி கார எஜமானரும் வெளுத்து வாங்கிவிட மாட்டார்களா ?'' என்று அவர்கள் சொல்லுகின்றனர். இந்தக் குடியானவர்கள் முதலியோர் பிழைப்பும் அவர்களுக்கு மேலானவர்கள் என்று சொல்லப் படுவோரிடம் இப்படித்தானிருக்கும் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

அரசியல் விஷயத்தைப் பற்றிப் பேசினல் "காந்திக்குப் பிடித்த பைத்தியம் யாருக்குப் பிடித்திருக்கிறது? இவரால் என்ன முடியும் ? வெள்ளைக்காரன் குண்டு போட்டுச் சுட்டுவிட மாட் டானு?'' என இன்றைக்கும் பெரிய மிராஸ்தார்களுங்கூட இப் படியே சொல்லுவதைக் காணலாம். ஜன நாயகதத்துவம் மக் கட்கு விளங்கிவிட்டது. இனி வெள்ளைக்காரன் மூட்டை கட்ட வேண்டுவதுதான் பாக்கி என்று வாய்ப்பறை சாற்றும் "தலைவர் கள்'' ஓட்டுவாங்கும் தினுசு வெகு விநோதமாயிருக்கும். சில ஓட்டர்கள் போலிங்கு ஸ்டேஷனில் போலீஸ் சேவகன் நிற்பதைக் கண்டு பயந்து ஓட்டம் பிடித்துவிடுவார்கள். தேர்தலுக்கு மூன்று மாதங்கட்கு முன்னிருந்தே பாடம் ஓதிவைத்துக் குறிப்பிட்ட தேதியில் காபி உப்புமாவைப் போட்டுத் திணித்து மோட்டாரில் வைத்துக் கூட்டிக்கொண்டு வந்து "என்ன ஐயா ஞாபகம்! செட்டி யார், முதலியார், ஐயர்; எங்கே திருப்பிச்சொல் பார்ப்போம் என்று கேட்டு அவர்களிடம் அரைகுறையான பதில் வாங்கிக் கொண்டு ஏஜண்டுகள் உள்ளே ஓட்ட, போலிங்கு ஆபீஸர் முன் னிலையில் திக்பிரமைகொள்ளுகிற ஓட்டர்களும் உண்டு. அநேக இடங்களில் கள், சாராயம் ஊற்றி ஓட்டுச்சேகரம் செய்ததையும் யாமறிவோம். முனிசிபல் தேர்தலில் ஓட்டுக்கு ஒரு பவுன் வீதம் அநேகருக்குக் கொடுத்த இடமும் சென்னை மாகாணத்தில்தா னிருக்கிறது. காமன் கொண்டாட்டத்தில் எரிந்தகட்சி எரியாக் கட்சிச் சண்டை எலெக்ஷன் சண்டைக்கு எவ்விதத்திலும் ஈடா காது. முனிசிபாலிட்டி, தாலூகா போர்டு, ஜில்லா போர்டு தேர் தல்களுக்கே பல ஆயிரம் ரூபா மூட்டை கட்டிக்கொள்ள வேண் டும். சட்ட சபைகளைப்பற்றிக் கேட்பானேன்? இவ்விதம் ஒன்று மறியா மக்களை ஏமாற்றுவதா சமரசம் ததும்பும் ஜனப்பிரதி நிதித்துவம்? என்று கேட்கின்றோம்.

தேசமானது அந்நிய ஆதிக்கத்தால் பொருளாதார விஷயத் தில் திண்டாடிக்கொண் டிருக்கிறது என்பதுண்மையே. ஆனல் இதை எதிர்த்துநின்று நலம்பெறும் சக்தி சமூக சமத்துவ உரிமை யில்தான் தங்கியிருக்கிறது.

நம்மை ஆள்வோர் சுயராஜ்யம் கட்டாயம் கொடுத்துவிடுவ தாகவும் அதற்கான முறையில் தேசத்தைப் படிப்படியாகப்

பழக்கி வருவதாகவும் சொல்லுகின்றனர். அது எப்படியோ இருக்கட்டும் நமது சக்திக்குறைவை ஒரு உதாரணத்தால் விளக்கிக் காட்டுகிறோம். இரட்டை ஆட்சி இதுவரை இந்தியாவில் எத்தகைய பலனைக் கொடுத்திருக்கிறது என்பதைக் கவனித்து இன்னும் அதிகப்படியான சீர்திருத்தங்களை வழங்க சைமன் கமிஷன் சமீபத்தில் வந்து போயிற்று. அதை பகிஷ்காரம் செய்ய வேண்டும் என்று ஒரு சில "தலைவர்கள்" சொன்னார்கள், சொல்லுகிறார்கள். இந்தியா சட்டசபையும் சில மாகாண சட்டசபைகளும் பகிஷ்காரத் தீர்மானத்தை நிறைவேற்றின. ஆனால் சைமன் கோஷ்டிக்கு நடந்த விருந்துகளைக் கண்டு எல்லா பகிஷ்காரத் "தலைவா"களுக்கும வாயில் நீர் ஊறிற்று. இந்தியா முழுவதிலுமுள்ள சகல வகுப்பினரும் கமிஷனை ஆடம்பரமாக வரவேற்றதைக்கண்டு ஏமாந்து அவர்கள் மனமொடிந்து போனார்கள். அந்தக் கமிஷன் சமீபத்தில் வரப்போகிறது. பகிஷ்காரஞ் செய்த சட்டசபைகள் முதல் எல்லாச் சட்டசபைகளும் அதனோடு ஒத்துழைப்பதற்கு கமிட்டிகளை நியமித்துக்கொண்டு வரிந்துகட்டி நிற்கின்றன. பார்ப்பனா, பார்ப்பனரல்லாதார், முஸ்லிம்கள், கிறிஸ்தவர், தாழ்த்தப்பட்டோர் ஆகிய எல்லா வகுப்பினரும் அதன்முன் சாட்சியங் கூறத் தயாராயிருக்கின்றனர். இதில் இன்னொரு வேடிக்கை! அதைப் பகிஷ்கரித்துச் சுயமரியாதையைக் காப்பாற்ற வேண்டும என்ற "தலைவர்கள்" எல்லோரும் மறைமுகமாக வேறு சாக்குவைத்து அவசரமாக தேசியத்திட்டம் தயாரித்து எல்லாருக்கும் முன்னமே சமர்ப்பணம் செய்து விட்டனர்! நேயர்கள் இவ்விஷயத்தைச் சற்றே ஆழ்ந்து சிந்திக்கவேண்டும். இந்நிகழ்ச்சிகள் தேசத்தின் பலக்குறைவையும் ஐக்கிய மின்மையையும வெளிப்படுத்த வில்லையா? இம்மாதிரி நமது தேசத்தில் அரசியல் விஷயத்தில் மற்றவர்கள நகையாடத்தக்க சம்பவங்கள் எத்தனையோ நடந்திருக்கின்றன. இவற்றிலிருந்து நாம் தெரிந்துகொள்ள வேண்டிய பாடம் என்ன? அரசியல் விடுதலையைவிட சமூகசமத்துவ உரிமையே அவசியமான அவசர விஷயம் என்பதே யாகும். தற்காலத்தில் சரியான பிரதிநிதித்துவமாவது பலரும் நம்பத்தக்க ஜனத்தலைவர்களாவது இல்லை என்று சொல்லுதல் குற்றமாகாது. இப்போது காணப்படுகிற பிரதிநிதித்துவமும், தலைமையும், பண முறுக்கின் பயனாக ஏற்பட்டவையே யொழிய ஜன ஊழியத்தின் பயனாக உள்ளவையல்ல. இவை சமூகசமத்துவ உரிமையினாலேயே ஏற்படும்.

சமூக வாழ்வுக்குக் கேவலமாக மதிக்கப்படுவோருடைய தொழின் முயற்சியும் ஊழியமும் இன்றியமையாத சாதனங்களா யிருக்கின்றன. ஆதலால் ஒவ்வொருவரும் தொழிலுக்கு மரியாதை செய்தே தீரவேண்டும். ஜாதியில் உயர்வு தாழ்வு கற்பித்துக் கொண்டு மக்களை இழிவுபடுத்துவோர் தங்கள் இன்பவாழ்

வுக் காதாரமான தொழின்முறைகளையே இழிவு செய்கின்றவர்களாகிறார்கள். இவ்வித அறியாமையே நமது தேசத்தைப் பன்னெடுநாட்களாக அடிமைக்குழியில் ஆழ்த்தி வருகின்றது. ஏதோ ஒரு வகையில் எந்த நாட்டிலும் உயர்வு தாழ்வு இருந்துகொண்டுதானிருக்கும். அது அவரவர் அறிவு ஆற்றலைப் பொறுத்த விஷயம். இல்லாத ஒன்றைக் கற்பித்துக்கொண்டு கொடுமை செய்வது கூடாதென்றே நாம் வற்புறுத்துகிறோம். ஒரு வகுப்பினர்தான் கற்கவேண்டும். இன்னொரு வகையார் போர் செய்ய வேண்டும். வேறொரு ஜாதியார் வியாபாரம் செய்ய வேண்டும். மற்றவர் ஊழியஞ் செய்ய வேண்டும் என்ற விதி சிருஷ்டியின் நோக்கத்தையே பாழ்படுத்துவதா யிருக்கிறது. இவ்விதி எல்லாருக்கும் பொதுவான தெய்விக சன்மார்க்கத்தை யுணர்த்தவந்த மதங்களின் பேரால் வழங்குவது மிகவும் விந்தையாக இருக்கிறது. நம் நாட்டுப் பெரியோர் ஜடப் பொருள்களிலும் தெய்வத்தன்மை காணும் தத்துவங்களைப் போதித்திருக்கின்றனர். இக்காலத்தில் அத் தத்துவங்களை உயர்ந்தவராகக் கருதப்படுவோர் அறவே ஒழித்துவிட்டு லௌகிக ஆடம்பரபோகங்களைத் தேவைக்கு மீறிக் கையாண்டு வருகின்றனர். இதே சமயத்தில் தாங்கள் உதறித் தள்ளிவிட்ட போலிச் சம்பிரதாயங்களால் பாமர மக்களைத் தலை தூக்கமுடியாமற் செய்தும் வருகின்றனர்.

மக்கள் நிலையை ஆராயுமிடத்து நமது முன்னேற்றத்துக்கு எவ்வளவு தூரம் அரசினரோடு ஒத்துப்போகக் கூடுமோ அவ்வளவு தூரம் கொஞ்சக் காலமாவது ஒத்துழைத்துத்தானாக வேண்டும். உயர்ந்த அந்தஸ்திலுள்ளவர்களும் அரசினரும் பிற்போக்கான மக்கட்குக் கல்வி புகட்டத்தக்க சௌகரியமான சந்தர்ப்பங்களை ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும். சீர்திருத்த விஷயத்துக்காக உழைக்கும் பத்திரிகைகளுக்கு எல்லாரும் ஊக்கமளிக்கவேண்டும். ஒவ்வொரு துறையிலும் பேரறிஞராக இருப்பவர் மற்றவர்களையும் தங்களைப்போலாக்க தியாக உணர்வுடன் பாடுபடவேண்டும். பொருட்செல்வம் வாய்ந்தவர் பொருளாதார முன்னேற்றத்துக்குத் தாராளமான திரவிய உதவிபுரிந்து ஒவ்வொருவரையும் தனவந்தராக்க முயற்சிக்க வேண்டும். சமய சாஸ்திர வல்லார் எல்லா மக்களையும் ஒன்றுபடுத்தும் திருத்தொண்டே தங்கள் பிறவிப்பயனைக் கருதி உழைக்க வேண்டும். கடவுள் தந்தை; மக்களெல்லாரும் உடன் பிறப்பாளர் என்ற சகோதரத்துவ உணர்ச்சியைப் பல விதத்திலும் வளர்க்கவேண்டும். இதனால் தேசீயம் மிக விரைவில் வளரத் தொடங்கும். இதன் உச்ச நிலைதான் சமத்துவம் எனப்படும். நமது கோரிக்கைகளை எல்லாம் திருவருள் கூட்டி முடிப்பதாக.

**ஓம் தத் ஸத்.**

# ஹேண்டல் என்னும் ஐரோப்பிய இசை அரசன்.

E. V. சிங்காரவேலு முதலியார்.

மக்கள் உற்பத்திக்காலந் தொடங்கி இசையில்—சங்கீதத்தில் இன்பத்தைப் பெற்று வந்தனர். இது இலக்கியம், பாட்டு, சித்திரம், சிற்பம், இசை என்ற ஐம் பெரும் லளித வித்தைகளி லொன்று. இனிய குரல்கொண்டு பாடப்படும் இசைகளைக் கேட்டு மகிழாதவர் யாவர்? அநுபவத்தில் நோக்கின் உலகில் பகலெல்லாம் கஷ்டப்பட்டு வேலைசெய்யும் கூலி ஆட்களுங் கூட இரவில் அம்மானையோ அல்லது தெருப்பாட்டுக்களோ பாடி யின் புறுதல் சதா பார்க்கப்படும் விஷயம். தெய்வபக்தர்களும், சீமான் சீமாட்டி களும், சிறுவர் சிறுமியரும், தீவினை இயற்றுவோரும், கள்வரும், பித்தரும், காமியரும் மற்றெவரும் பொதுவில் இசையில் இன்பமுடையவர்களே. வேலையின் கஷ்டத்தைப் போக்க ஏற்றமிறைப்போர் ஏற்றப்பாட்டுப் பாடு வதும், தெருக்களில் பாரமுள்ள சாமான்களை கைவண்டிகளி விழுத்துச் செல்லுவோர் ஒத்துப் பாட்டுப் பாடுவதும், காமிகள் காமச்சுவை ததும்பிய தெம்மாங்குகளைப் பாடுவதும், பரமாத்மாவின் அநந்த கல்யாண குணங்களி லீடுபட்டோர் தேவாரம், திருவாசகம், திவ்யப் பிரபந்தம் முதலிய பக்தி ரசம் செறிந்த பாடல்களை இசையுடன் படிப்பதும் சாதாரணம்.

இவற்றைக் கவனிக்கின் நம்மிடை இசைபெரிய ஸ்தானம் வகித்திருக் கின்றது என்பது வெள்ளிடைமலை. இசையின் சுவையிலீடுபட்டு ஆநந்தத்தை அடையாதார் எண்ணிக்கை மிகவும் சொற்பமே. அச்சொற்பமும், ஷேக்ஸ் பியர் என்ற ஆங்கிலக் கவிஞர் கூறியவாறு பெரும்பாலும் கொடிய கொலை பாதகரும், உணர்ச்சியற்ற தந்திரசூழ்ச்சிக்காரருமாயிருப்பர். சங்கீதத்தின் உபயோகத்தையும், பெருமையையும் கூறின் விரியும். சுருங்கச்சொல்லின் மனிதனது ஆத்மார்த்த விஷயங்களில் மேன்மையடைவதற்கும், தளர்ந்து சோர்வுற்றிருக்குங் காலத்து அதை அகற்றிப் புதிய உற்சாகத்தையும், ஊக் கத்தையும், தீவிரத்தையும் அளித்தற்கும், தன்னினைவற்று உலகியல் மறந்து தெவிட்டாத ஆநந்தத்தை உண்டுபண்ணுதற்கும் சாதகம் சங்கீதமே. இசை அல்லது கீதம் மிருகங்களையும் பரவசப்படுத்தும் தன்மையது. "கல்லும் கனிந்துருகிக் கரையச்செய்யும் காந்தாரம்" என்பர் நம்முன்னோர்.

எந்நாடும் முன்னேற்ற மடைந்திருக்கின்றது எனக் கூறுமிடத்து அந் நாட்டு மக்களின் கல்வி, பொருளாதாரம், வியாபாரம், சமூகதிருத்தங்கள் முதலிய சாதனங்களில் அபிவிருத்தி அடைந்திருத்தல் வேண்டும். இவை எப் படி ஒரு தேசத்தின் முன்னேற்றத்திற்கு இன்றியமையாதனவோ அம்மாதி ரியே அந்நாட்டின் மேன்மைக்கும், நாட்டுப் பாஷையின் பெருமைக்கும், சிறப்பிற்கும் கீதம் அல்லது இசை மிகவும் முக்கியமானது. ஒவ்வொரு நாட்டி லும் அவ்வப்போது பல பெரிய இசை அரசர்கள் தோன்றி மக்களின் உள்ளத் தில் ஆத்மஞானத்தைப் புகுத்தி வரம்பிலின்பம் தந்து மனிதரைப் புனித ராக்கி வந்தனர். இசைவலலோர் மூலமாகவே கடவுளர் தம் படைப்புத் திறத்தையும், தத்துவத்தையும் மற்ற யாவருக்கும் விளக்குகின்றார் ஆதலின் பாடகர்களே கடவுளின் தூதர்கள்என்று கவி ப்ரௌனிங் கூறுவர். தெலுங்கு இசை அரசன் தியாகராஜப் பெருமானைப்பற்றிக் கேள்விப்படாதார் இருப் பார் என்பது துர்லபம். அவரது அழகிய, இனிய கீர்த்தனைகளை (கீதங்களை)க்

கேட்டுப் புகழாதாரில்லை. இவ்வாறே ஐரோப்பாவில் இசை அல்லது சங்கீதத்தில் வல்லாரைக் குறிப்பிடுங்காலத்து ஹேண்டலின் நாமமே முன்னிற்கின்றது. என்று மழியாது தம்பெயரை உலகில் நிலைநாட்டிய அந் நல்லாரின் சரித்திரத்தை ஈண்டுச் சுருக்கிக் கூறுவாம்:—

## ஹேண்டலின் பிறப்பு வளர்ப்பு.

ஓர் ஏழை நாவிதன், அரசனுடைய அரண்மனை வைத்தியனாயின் அவன் தன்னைப்பற்றிப் பெருமையாய் நினைத்துக் கொள்வது ஒரு விந்தையல்ல. ஜார்ஜ் ஹேண்டல் என்பவர் ஜெர்மனிதேசத்தில் ஹாலி என்னும் நகரத்தில் ஒரு முக்கிய மனிதரே. முதலில் சாதாரண நாவித வைத்தியராகவிருந்து பின்னர் பல பிரபுக்களுக்கும் அரசர்களுக்கும் நண்பராகவும் குடும்ப வைத்தியராகவும் பிரபலம் பெற்றிருந்தார். அவருக்கு 1685-ம் வருஷம் பிப்ரவரி 23-ந் தேதி ஓர் மகவு பிறந்தது. அக்குழந்தைக்குப் பெரியதோர் வாழ்க்கைக்குரிய வசதிகளைச்செய்ய முற்படுவாராயினர். தனக்குத் தன் மூதாதைகள் செல்வமும் சிறப்பும், பேரும் புகழும் தேடிவைக்காததற்கு வருந்தாது தனக்குப் பின்வரும் சந்ததியாருக்கு அவற்றைக் கொடுக்கும் வழிதேடும் அறியோரில் இவர் ஒருவர். செந்நாப்புலவரின் தந்தை "தந்தை மகற்காற்று முதவி யவையத்து முந்தியிருப்பச்செயல்" என்னும் கூற்றிற் கேற்ப ஒருநாள் அவர் தன்னருமை மனைவியிடம் "நாம் நம் குழந்தையை ஒரு கலாவல்லவனாக்கல் வேண்டும். அவனைச் சர்வகலாசாலைக்கு அனுப்பிச் சட்டங்களை ஐயந்திரிபறக் கற்கச் செய்து நான் இறக்குமுன் அவனை நம் தேச ராஜதந்திர நிபுணனாகவும், சட்ட மந்திரியாகவும் காணுவேன்" என்று ஆர்வமுடன் புகன்றார். குழந்தை இவர்களின் அன்பான பாதுகாப்பில் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து பூர்ணசந்திரனை போன்று பிரகாசித்து, மழலையாடிப் பெற்றோர்களுக்கு ஆனந்தத்தைக் கொடுத்து வந்தது. ஆனால் ஜார்ஜ் பிரடரிக் ஹேண்டல் என்னும் பெயரினைக்கொண்ட அந்தப் பையனுக்குப் புத்தகங்களின்மீது கிஞ்சித்தேனும் பிரியமில்லை. ஒருநாள் தந்தை தனது குழந்தையினது அறையில் இடைவிடாது உண்டாகும் சத்தத்தின் காரணம் என்னவென்று போய்ப்பார்த்தார். அந்த அறையில் எங்கும் பல வாத்தியக் கருவிகளும் விளையாட்டுப் பொம்மைகளும் பரவிக் கிடந்ததைக் கண்ணுற்றார். ஒரு புத்தகங்கூடக் காணப்படவில்லை. பிரடரிக்குக் கொடுக்கப்பட்ட எல்லாப் பணமும் வாத்தியக் கருவிகள் வாங்கச் செலவிடப்பட்டிருப்பதை அறிந்தார். பையன் பிறந்தபோதே அவர்கொண்ட எண்ணங்களுக்கும் கனவிற்கும் இது சற்றேனும் ஒத்திருக்காததைக் கண்டு மனம் கொதித்து வெகுண்டனர். "வாத்தியம்! கீதத்தால் மனிதன் என்ன நன்மையை அடையக் கூடும்? இது அவன் முன்னேற்றத்திற்கும் கீர்த்திக்கும் எப்படிப் பயன்படும்?" என்று கோபத்தோடு தன் மனைவியை உசாவி, "குழந்தையை இந்தப் பயனற்ற வீணான குப்பையான காலத்தை விருதாவாகக் கழிக்கும் பயிற்சியிலிருந்து தடுத்துப் பிரயோஜனத்தை உடைய கல்வியைப் போதிக்க உனக்குத் தெரியவில்லை இனி ஒருகணமும் இம்மாதிரி விடேன். அவனிப்போதே பள்ளிக் கூடத்திற்குச் சென்று பயனுடையவற்றைக் கற்றுக் கொண்டிருத்தல் நல்லது" என்று கூறி அங்குக் கிடந்த வாத்தியக் கருவிகளை ஒன்று விடாமல் நெருப்பில் போட்டு அவை எரிந்து, பொடிந்து சாம்பலாகும் வரை அங்கேயே நின்று பார்த்திருந்து பின்னர் வெளிச் சென்றார். இப்போது அந்த வாத்தியக் கருவிகளைக் காணுவதற்கே உலகம் பெருந் திரவியக்குவியலைக் கொடுக்கத் தயாராயிருக்கின்றது! இனி

பிரடரிக் விளையாட; இன்பமுற என்ன செய்வான்! அவனுடைய அருமை வாத்தியக்கருவிகள் நீக்கிரையாயின. ஐந்து வயதான அவன் தந்தைக்குக் கீழ்படிந்து பள்ளிக் கூடத்திற்கு நடந்து சென்று கஷ்டத்துடன் பாடங் களைப் படித்து வந்தான்.

படிப்பு அவனுக்குச் சிறிதேனும் சந்தோஷத்தைக் கொடுக்கவில்லை. வாத்தியக் கருவிகள் அழிக்கப்பட்ட பின்னர் அவனுக்கு எதன்பேரிலும் இச்சையில்லை. அவன் மனம் தளர்ந்தது. உற்சாக மொழிந்தது. இன்பமும் சமாதானமும் துறந்தன. வருத்தமும் கலக்கமும் குடிகொண்டன. அகத்தி லுள்ளது முகத்தில் தெரியும்; இவன் முகம் வாடிக் கருத்தது. உடல் இளைத் தது. இதை நோக்கினவர் எவர்? தந்தை தன்னுடைய வைத்திய அலுவல் களால் அடிக்கடி வெளிச்செல்ல நேர்ந்ததால் இதனைக் கவனிக்கக்கூட வில்லை. ஆனால் அவனுடைய தேகமே தன்னுடையது, அவனது சுகமே தன் சுகம், அவனுடைய சந்தோஷமே தன்னுடைய சந்தோஷம் என்று அல்லும் பகலும் அறுபது நாழியும் கவலையுற்றிருக்கும் தாய் இதனைக் கண்டு எவ்வாறு சகிப்பாள்? இந்த மாறுபாட்டைக் கண்ட அவள் தன்னை மனம் வாடி னாள். வாரங்கள் பல கழியப் பையன் மனச்சோர்வுற்றுச் சமாதான மழிந் தான். உற்சாகத்தையும், பிரகாசத்தையும் காட்டும் அவன் முகம் வாட் டத்தைப் புலப்படுத்திற்று. கடைசியாக அவன்தாய் பையன் படுந்துயரத் தைக் காணச் சகியாளாய்த் தன் கணவனில்லாத சமயத்தில் அவனைத் தனித்து அழைத்து அவனுக்கு ஏற்பட்டிருக்கும் மாறுதலுக்கு என்ன காரணம் என்று வினயமாகவும பரிவுடனும் கேட்டாள். அதற்கு அவன் "என் வாத்தியம்! அம்மா! அதில்லாமல் நான் உயிருடனிருப்ப தரிது" என்று கதறிக் கூறி னான். தன் கணவனின் கட்டளைக்கு மீறி எப்படி நடப்பது? என்று யோசித்து அவனுக்கு வெகுநேரம் பயனில்லாத பல சமாதானங்களைச் சொல்லித் தேற்ற முயன்றாள்.

இதற்கு எப்படியாவது பரிகாரம் தேடவேண்டுமெனச் சிந்தித்துக் கொண்டிருந்த அவ்வம்மையாருக்கு பிரடரிக்கின் அத்தை அன்னாவின் ஞாப கம் வந்தது. அன்னாவுக்கு அக்குழந்தையின்பேரில் அபாரமான பிரியமுண்டு. அவளிடம சென்று பிரடரிக்கின் குறையைக் கூறினாள். அன்னா உடனே தன் தமையன் மனைவியை நோக்கி "அண்ணீ! இன்று சாயங்காலம் எங்கள் அண்ணா வீட்டில்தானிருப்பாரோ" என்று வினவினாள். "இல்லை அவர் இன்று ஒரு பிரபுவைக் காணச் செல்லுவார்" என்று மறுமொழி புகன்றாள். இதைக்கேட்ட அன்னா புன்முறுவல்செய்து அவளை வீட்டிற்கு மனச் சமா தானத்துடன் செல்லுமாறு கேட்டுக்கொண்டாள். அன்று சாயங்காலம் மணி ஐந்திருக்கும். அரண்மனை வைத்தியர் ஹேண்டலின் வீட்டின் முன்பு ஒரு பெட்டி வண்டி வந்து நின்றது. அவ்வண்டியினின்றும் ஒருபெரிய வாத்தியப் பெட்டி ஒன்று இறக்கப்பட்டு வீட்டின்மேன்மாடி அறைகளிலொன்றில் கொண்டுபோய் வைக்கப்பட்டது. அது யாருடையது என்று நினைக்கின் றீர்கள்? அன்னா அத்தையினுடைய பழைய பியானோவே இப்போது இங்கு அனுப்பப்பட்டது. டாக்டர்ஹேண்டல் களைத்து வீடுவந்து சேர்ந்தார். நல்ல உண்டி அருந்தினர். களைப்பும் நல்ல உண்டியும் அவரை நித்திரா தேவி யின் வசமாக்கின. அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார் அரண்மனை வைத்தி யர். அவரது மனைவி தன் தனயனைக் கையில் பிடித்துக் கொண்டு மாடிக் கோபுரத்தை அடைந்தனர். அன்று வெகுநேரம் வரையில் அவன் படுக்கைக் குச் செல்லவில்லை. மறுநாட் காலையில் பையன் வதனத்தில் என்றுமில்லாத பொலிவு காணப்பட்டது. சந்தோஷத்தோடு பள்ளியை நோக்கி நடந்

தான். இதனைக் கண்ட தந்தையார் பூரிப்புடன் தன்பிரிய நாயகியை நோக்கி "பார்த்தாயல்லவோ நம்மகனை! நான் முன்னரே தெரிவிக்கவில்லையா? இன்னும் இரண்டு மாதங்கள் கூட ஆகவில்லை; அதற்குள் பையன் விவேகமற்ற அசங்கிய விளையாட்டுச் சாமான்களை விட்டுப் படிப்பின் பேரில் உண்மையான அவாக்கொண்டு சந்தோஷத்தோடு பள்ளிக்கூடம் செல்லுவதை! அவன் எப்படியும் அரசனுடைய முக்கிய மந்திரியாகும்படி செய்வேன்" என்று கொஞ்சிக்கொண்டு சொன்னார். இதனைக் கேட்ட அவ்வம்மை புன்னகை செய்தாள். (தொடரும்)

## இளைஞர்க்குரிய இதோபதேசம்.

காரியக்காரராக விளங்குமின்; போலிபாவனை வேண்டாம்; காரியசித்திக்குரியமார்க்கம் எளிதானதல்ல. போலிநெறி மிகவும் சுலபமானது.

புதிய இந்திய நிருமாணத்திற்கு ரஷ்ஷியாவையோ இத்தாலியையோ இங்கிலாந்தையோ நோக்கவேண்டுவதில்லை.

ஒவ்வொரு நாட்டின் முன்னேற்ற அநுபவங்களை எல்லாம் கற்றுகொள்ளுங்கள். ஒன்றையும் பின்பற்றாதீர்கள்; எல்லாம் உங்கள் சொந்தப் போக்காக இருக்கட்டும். இன்னொருவரைப்போல இருக்கவேண்டும் என்ற நினைப்புவேண்டாம்.

ஒவ்வொரு சமூகமும் காலத்துக்கேற்பமாறும் வளர்ச்சி முறை தத்துவத்திற்குக் கட்டுப்பட்டு தந்தம் சொந்த அறிவாற்றல் ஆதாரங்களால் உயரவேண்டும். வேறொருவரைப்போலிருக்க முயற்சித்தல் தன்னையே தாழ்த்திக்கொள்ளல் ஆகும். சுயாநுபவத்தால் சுதந்தரம் தங்கும்.

இந்தியா இந்தியாவாகவே இருக்கவேண்டும். சொந்த இந்தியாவாகவே இருக்கவேண்டும்.

ரஷ்ஷியாவின் பொதுவுடைமைக் கொள்கையோ, பிரிட்டானியரின் யந்திரதந்துவமோ, மேனாட்டாரின் முரட்டுவாதங்களோ இந்தியமாதாவின் இடையறுக்கவலையை நீக்கிவிடா. உலகத்துக்கே நன்னெறிகாட்டவல்ல தத்துவ பொக்கிஷம் பாரதமாதா.

ஆதலால் நம்முடைய தீர்க்கதரிசிகள் மஹரிஷிகளுடைய ஞான முழக்கங்களைக் கவனிக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

நம் முன்னோரின் ஞானதத்துவாமிர்தத்தையும் தற்கால மேனாட்டு விஞ்ஞான சாஸ்திர தத்துவத்தையும் கலந்து பாரதமாதா ஆற்றல்வாய்ந்த சுதந்தரதேவியாக விளங்குமாறு அலங்கரிக்கவேண்டும். நமது இளைஞரியக்கவீரர் சிந்திப்பாரா?

அறிஞர் வாஸ்வானி.

# கல்விச் சீர்திருத்தம்.

## அறிவுக்குச் சாதனமான பாஷை.

(எஸ். சிவராமன் பி. ஏ., எல் டி.)

தேசத்தின் முன்னேற்றத்திற்குக் கல்வி அபிவிருத்தி இன்றியமையாதது என்பது யாரும் ஒப்பின உண்மை. நமது தேசத்தில் இப்பொழுது அனுஷ்டிக்கப்படுகிற கல்வி முறையில் உள்ள குறைகள் பல. அக்குறைகளில் முக்கியமான தொன்றை ஆராய்வோம்.

பள்ளிக் கூடத்தில் மாணவர்கள் கணிதம், இயற்கை சாஸ்திரம், சரித்திரம், பூகோள சாஸ்திரம் முதலிய அறிவைப் புகட்டும் பாடங்கள் பயில வேண்டியிருக்கிறது. அப்பாடங்களைத் தொட்டிலிலிருந்து பழக்கமாயுள்ள தாய்ப்பாஷையின் மூலமாகப் பயில்வதுதான் மிகச் சுபாவமான முறை என்பது தெளிவான விஷயம். அவ்விதமேதான் இங்கிலாந்து, பிரான்சு, ஜெர்மெனி, ஜப்பான் முதலான எல்லா முற்போக்குத் தேசங்களிலும் நடந்து வருகிறது. அந் தேசத்திலுள்ளோர்க்குத் தங்கள் சிறுவர்கள் ஓர் அன்னிய பாஷையில் எவ்வித அறிவையும் கற்பது என்ற எண்ணம் சிந்திக்க முடியாத ஓர் விந்தையாய்ப்படும்.

நமது தேசத்திலோ நம் சிறுவர்களுக்கு மூன்றாவது பாரத்திற்குமேல் எவ்வித அறிவும் அன்னிய பாஷையாகிய இங்கிலீஷ் மூலமாய்ச் சொல்லிக் கொடுக்கப்படுகிறது. எப் பாஷையின் மூலமாய் மிக எளிதாய் அறிவையடையலாமோ அப்பாஷையின் மூலமாய் அல்லவா அடையவேண்டும்; அது தாய்ப்பாஷை யல்லவா; ஆங்கில பாஷை இந்திய பாஷைகளினின்றும் மிகுந்த வித்தியாச முள்ளதாதலால் அதை இந்தியர் கற்றுக்கொள்வது மிகுந்த கடினமாயிருக்கிற தென்று இங்கிலீஷ் கற்றுக்கொண்ட எந்த இந்தியரும் ஏற்றுக்கொள்ளுவார். ஆகையால் அம்மிகக் கடினமான பாஷையின் மூலமாக எவ்வித அறிவையும் கற்பது சிறுவர்களுடைய காலத்தையும் மனோசக்தியையும் வீணாக்கி அறிவுப் பயிற்சியைத் தடைப்படுத்தவும் குறைப்படுத்தவும் செய்கிறது.

சிலர் தாய்ப்பாஷையில் சொல்லிக் கொடுப்பதற்கு ஆட்சேபமாக புதிய சாஸ்திரங்களில் வரும் விசேஷ பதங்களுக்கு இந்திய தாய்ப்பாஷைகளில் தக்க பதங்கள் இல்லை என்று சொல்லுகிறார்கள். இது முற்றிலும் தவறானது. மேனாட்டுப் பாஷைகளிலும் சில நூற்றாண்டுகளுக்கு முன் அப்பதங்கள் ஒரு சிறிதும் இல்லை என்னும் விஷயம் அவ்வாதக்காரர்களுக்குச் சிறிதும் ஞாபகமிருக்கிறதில்லை போலும். சாஸ்திரங்கள் அபிவிருத்தியாக ஆக ஏற்கனவே உள்ள வார்த்தைகளிலிருந்தோ அல்லது கிரீக் ரோமன் பாஷைகளிலிருந்தோ புதியவார்த்தைகள் உண்டாக்கப்பட்டன. அவ்வாறே நம் பாஷைகளிலும் ஏற்கனவே உள்ளவற்றிலிருந்தாவது ஸமஸ்க்ருதத்தி லிருந்தாவது புதிய சாஸ்திர விசேஷபதங்களுக்கு வார்த்தைகள் உண்டாக்குவது அசாத்திய

மானதல்ல. சிற்சில இடங்களில் இங்கிலீஷ் வார்த்தைகளையே வேண்டுமானால் கடன் வாங்கிக் கொள்ளலாம். மற்றத் துறைகளில் மிருந்த முன்னேற்றமடைந்த நம் தாய்ப்பாஷைகளில் நூதன சாஸ்திரங்களை இயற்ற முடியாதென்பது பொறுக்க முடியாத இழிவாகும். அநேகர் பிரத்தியக்ஷத்திலேயே தக்க வார்த்தைகளை உண்டாக்கி நம்பாஷைகளின் சக்தியைச் சிறிது சிறிதாய் ருசுப்படுத்திக் கொண்டு வருகிறார்கள்.

நூதன அறிவு தாய்ப்பாஷையில் கொணரப் பட்டால்தான் நம் தேசத்தில் அறிவு இடையூறின்றிப் பரவும். தற்காலம் கல்விகற்றவர்களின் அறிவு பெரும்பான்மையான ஜனங்களுக்குத் தெரியாத அன்னிய பாஷையில் கட்டுண்டிருப்பதால் அவர்கள் அறிவு தேசத்திற்குப் போதுமான பிரயோஜனத்தைக் கொடுக்கக் கூடவில்லை. கற்றோர்க்கும் கல்லாதவர்க்கும் இடையில் அகன்ற பிளவு ஏற்பட்டு இருவகுப்பாரும் ஒருவர்க்கொருவர் அன்னியர் போல் ஆய்விட்டனர். அவ்விரு வகுப்பாரும் ஒன்றாய் ஐக்கியமாகித் தேசம் ஓங்க நூதன அறிவெல்லாம் தாய்ப்பாஷைகளில் ஊட்டப்படவேண்டுவது அத்தியாவசியமானது.

இவ்விஷயமாக சர்க்காருக்கு ஓர் கடமையும் ஜனங்களுக்கு ஓர் கடமையும் இருக்கின்றன. சர்க்கார் முதலாவதாக ஒவ்வொரு சாஸ்திரத்திலும் விசேஷ பதங்களுக்குத் தாய்ப் பாஷைகளில் பதங்கள் காணுமாறு ஓர் கமிட்டி ஏற்படுத்தவேண்டும். அப்பொழுதுதான் சாஸ்திர பதங்களில் ஒற்றுமை ஏற்படும். இரண்டாவதாக அறிவைத் தாய்ப்பாஷைகளில் புகட்டும்படி பள்ளிக் கூடங்களைக் கட்டாயப் படுத்தவேண்டும். ஜனங்களும் இச் சீர்திருத்தத்தை அடைய விடா முயற்சி செய்யவேண்டும். இப்பொழுதே கல்வி இலாகாவானது பாடங்களை ஆறாவது பாரம்முடியத் தாய்ப்பாஷையில் சொல்லிக் கொடுக்கலாம் என்று அனுமதி கொடுத்திருக்கிற படியால், முனிசிபல் அல்லது போர்டு அங்கத்தினர்கள் தங்கள் பார்வையிலுள்ள பள்ளிக்கூடங்களில் இச் சீர்திருத்தத்தைக் கொண்டு வருவது மிகவும் விரும்பத் தக்கது. நமது பள்ளிக் கூடங்களில் இங்கிலீஷ் பாஷையே கற்பிக்கக் கூடாது என்று வாதிப்பதாகத் தவறாய் நினைக்க வேண்டாம். எப்பொழுதும்போல் இங்கிலீஷ் பாஷை அதன் உபயோகத்திற்காக ஒரு பாடமாக இருக்கும். எது ஆட்சேபிக்கப் படுகிறதென்றால் எவ்வித அறிவும் அன்னிய பாஷையின் மூலமாய்ப் புகட்டப் படுவதே.

---

**மாணவர்களின் மனம் தத்தளிப்பதெப்பொழுது?**

அவர்கள் எழுதப்போகும் பரீக்ஷைக்கு முதல் நாளும், பரீக்ஷையின் முடிவு விபரம் தெரியும் தினத்திற்கு முந்திய நாளுமாகும். இது உண்டா? இல்லையா?






# வேதாந்த சார சங்கிரக வசனம்.

(145-ம் பக்கத் தொடர்ச்சி.)

(பூ. ஸ்ரீநிவாஸன், தமிழ்ப்பண்டிதர்.)

ஞான குமாரா! மாந்தர் தமது எதார்த்த நிலைமையை யறியாமல் பிராந்தியால் நான் மனிதன், நான் பிராமணன், நான் ஞானி, நான் மூடன், நான் பாவி, நான் பிரஷ்டன், நான் இஷ்டன், நான் சுகி, நான் துக்கி என்றிவ்வாறு மோகமடைந்து ஆத்மாவினிடத்து இவைகளிருப்பதாகக் கற்பிக்கின்றனர். (மேற்கூறிய இவையாவும் தேகாதி அந்தக்கரணங்களின் தர்மங்களே யன்றி ஆத்மாவின் தர்மங்களாகா; அங்ஙனமாகவும் நான் என்னும் பொருளுக்கு விஷயமாகவுள்ள ஆத்மாவின் சச்சிதானந்த லட்சணத்தை யறியாமையால் இத்தன்மைகள் ஆத்மாவிற்குரியன என்று மயங்கி இவ்வாறு இயம்புகின்றனர்.) பிராந்தியால் ஜனனம், விருத்தாப்பியம், மரணம், முதலிய தேக தர்மங்களையும், பசி, தாகம், சுகம், துக்கம் பயமாதிய அந்தக்கரண தர்மங்களையும் ஜனனாதிகளில்லாத ஆத்மாவினிடத்து ஆரோபிக்கின்றனர். அவ்வாறு ஆரோபித்தாலும் ஆத்மாவினிடத்து அவையுண்டாவதில்லை. பிராந்தியால் கயிற்றினிடத்து பாம்பு ஆரோபிக்கப் பட்டாலும் சர்ப்பத்திற்குள்ள விஷாதிகள் அப்பாம்பினிடத்திருப்பதில்லை. அவ்வாறே ஆத்மாவினிடத்து ஆரோபிக்கப்படும் அநாத்ம வஸ்துவினுடைய அநிருத (அசத்து), ஜட, துக்காதி தோஷங்கள் ஆத்மாவினிடத்தும், ஆத்மாவின் சச்சிதானந்த குணங்கள் அநாத்மாவினிடத்தும் சேருவதில்லை. கானலைக் கண்டு உலகோர் ஜலமென மயங்கினாலும் அக்கானல் நீரினால் பூமி நனைவதில்லை. காமாலைக் கண்ணன் வெள்ளிய சங்கைப்பார்த்து இது பசுமை நிறமாயிருக்கின்றதென நினைத்தாலும் அச்சங்கு பசுமைநிறமடைவதில்லை. சிறுவர் ஆகாயத்தைப் பார்த்து ஆகாயம் நீல நிறமாயிருக்கின்றதென்கின்றனர். ஆயினும் அது நீல நிறமாவதின்று. அவ்வாறே, அநாத்மாவின் தர்மங்களாகிய ஜனனமரணாதிகளை ஆத்மாவினிடத்து ஆரோபித்தாலும் அது அவைகளை அடைவதில்லை.

சீடன்:—குருநாதா! சச்சிதானந்த லக்ஷணமுடைய ஆத்மாவினிடத்து அசத்து ஜட துக்க லக்ஷணமுடைய அநாத்மாவின் தர்மங்கள் ஆரோபிக்கப்படுகின்றனவெனத் தாங்கள் கூறினீர்கள். அது பொருந்தாது. எனெனின், ஒருவஸ்துவினிடத்து மற்றொரு வஸ்துவைக் காணுதல் ஆரோபமாம். பாம்பல்லாத கயிற்றில் பாம்பைக் காணுதல் ஆரோபம். இவ்வாரோபம் பிரத்தியட்சமாகக் கண்ணெதிரில் காணப்படும் வஸ்துவினிடத்தே யுண்டாவதாம். ஆத்மாவோ காணக்கூடிய (திருசிய) வஸ்துவன்று. கோசரமாகாத ஆத்மாவினிடத்து ஆரோபமுண்டாதல் எங்ஙனம்? அன்றியும் அத்தியாசத்திற்கு சாதிருசியமும் சமானதருமமு மிருத்தல் வேண்டும். கயிறு நீளமாயிருக்கிறது; பாம்பும் நீளமாயிருக்கின்றது; இவ்வாறு இரண்டினிடத்தும் சமான தர்மமிருக்கின்றது. கிளிஞ்சலில்

வெள்ளி ஆரோபிக்கப்படுகின்றது. இங்கு கிளிஞ்சலும் வெண்மை; வெள்ளியும் வெண்மை. இவ்வாறு இரண்டினிடத்தும் சமானதர்ம மிருக்கின்றது. ஆதலால் சமானதர்மமே அத்தியாசத்திற்குக் காரணமா யிருக்கின்றது. இஃதிங்ஙனமாக, கோசரமாகாத வஸ்துவினிடத்து அத்தியாச மெவ்வாறுண்டாகும்?

(ஒருவஸ்துவைப் பார்த்தல்லவா அதனிடத்து மற்றொன்று என்று பிரமிக்கவேண்டும்? மேலும், தான்கண்ட பொருளுக்கும் பிரமிக்கப்பெற்ற பொருளுக்கும் சமானதர்ம மிருத்தல் வேண்டும். கயிறு காணப்பட்டாலன்றோ அதனிடத்துச் சர்ப்பமென்று பிரமித்தல் சம்பவிக்கும். அவ்வாறு ஆத்மாவைக் கண்டு அநாத்மாவென்று பிரமிப்பதற்கு ஆத்மா காணப்படும் வஸ்துவாக இருத்தல்வேண்டும். ஆனால் அங்ஙனமின்று. அன்றியும், கயிற்றைக்கண்டு இது பாம்பு என்று மயங்குதற்கு இரண்டினிடத்தும் நீளமாயிருத்தலாகிய சாதிருசியமுளது. ஆனால் ஆத்மா அநாத்மாக்களிடத்துச் சாதிருசியமில்லை. ஒன்றுக்கொன்று விருத்த (வேறுபட்ட) லட்சணமுள்ளவை. ஆத்மா சத்து சித்து ஆனந்த லட்சணமுடையது; அநாத்மா அசத்து ஜட துக்க லட்சணமுடையது. சாதிருசியமின்றி விருத்தலட்சண முடைய இரண்டு பொருள்களினிடத்து அத்தியாச மெங்ஙனஞ் சம்பவிக்கும். இஃதசம்பவமாம்.)

ஆத்மாவினிடத்து அநாத்மாத்தியாசம் இங்ஙனமாக, அநாத்மாவாகிய தேகேந்திரியாதிகளினிடத்து ஆத்மாவென்னும் பிரமை எங்ஙன முண்டாயிற்று? இப்பிராந்தி எவ்வுபாயத்தால் நிவிர்த்தியாகும்?

அத்யாசத்திற்கு உபாதியே காரணமாகுமாயின், அவ்வுபாதி சம்பந்தம் ஜீவேசுவரர்களிருவருக்கும் சமானமேயாகும். அங்ஙனமாக, ஜீவனுக்குமட்டும் பந்தமுண்டாவதேன்? ஈசுவரனுக்கு இல்லாமலிருப்பதேன்? சற்குரு மூர்த்தி இந்த ஐயங்களை யகற்றவேண்டும்.

குரு:—அன்புள்ள குமாரா! ஆத்மா அவயவமுடையதன்று. ஆதலால் ஒருவராலும் காணமுடியாததாம். (கண்ணானது அவயவமுடைய பொருள்களையே காணுந் தன்மையுடையதாகும.) ஆயினும், இந்த ஆத்மவஸ்துவானது நானென்னும் ஞானத்திற்கு கோசரமாவதாலும் எல்லோராலும் 'நான் இருக்கிறேன்' என்று அனுபவிக்கப்படுவதாய் அபரோக்ஷமாயிருத்தலாலும் ஆத்மா இருக்கின்றதென்பது பிரசித்தியாம். 'நான் இருக்கிறேன்' என்னும் ஞானத்தால் ஆத்மாவினிடத்து விசுவாசமிருக்கின்றது. எவருக்கும் நான் இருககிறேன் என்னும் விஷயத்திற்குப் (தன்னிருப்பிற்கு) பிரமாணம் வேண்டியதின்றாம். (இதனால் கோசரமாகாத ஆத்மாவினிடத்து அத்தியாச மெவ்வாறுண்டாமென்ற சீடன் வினவிற்கு, ஆத்மா கோசரமாகாததன்று; கண்ணாற் காணப்படாததாயினும் நான் என்னும் ஞானத்திற்கு விஷயமாய் அனுபவசித்தமா யிருப்பதாகலின் தன்னிருப்பிற்கு வேறு பிரமாணம் வேண்டுவதின்றாம். ஆகலின் அது உள்ள வஸ்துவே எனச் சமாதானம் கூறப்பட்டது.)

இந்த ஆத்மாவானது மாயையின் காரியங்களான அகங்காராதிகளால் மறைக்கப்பட்டதாயிருத்தலின் மேகங்களால் மறைக்கப்பட்ட சூரியன் காணப்படாததுபோல நன்றாக விளங்குவதில்லை.

எதிரில் பிரத்தியட்சமாகக் காணப்படும் வஸ்துவில்தான் அத்தியாசமுண்டாகுமெனக் கூறினையன்றோ? அத்தியாசத்திற்குப் பிராந்தியே காரணமாகுமின்றி, எதிரிற் காணப்படும் வஸ்துவில்தான் அத்தியாசமுண்டாமென்

னும் நியதியில்லை. மூடர்கள், பார்வையிற்படாத ஆகாசத்தினிடத்து நீலநிற முதலானவற்றைக் காண்பதுபோல பார்வையிற் படாத ஆத்மாவினிடத்தும் சித்தப் பிராந்தியால் ஆரோபிக்கின்றனர். (காணப்படாத வஸ்துவினிடத்து அத்தியாசமெவ்வாறுண்டாகுமென்ற கேள்விக்குச் சமாதானங் கூறப்பட்டது.)

தேகேந்திரியாதிவடிவ அநாத்ம வஸ்துவினிடத்து ஆத்மத்தன்மை வடிவ அத்தியாசமுண்டாதற்கு சமானதர்மம் வேண்டுவதின்று. கண்ணில் காமாலை என்னும் தோஷமுடைய ஒருவன் சங்கைப்பார்த்துப் பசுமையாயிருக்கிறதென்கிறான். அங்கு என்ன சமான தர்மம் இருக்கின்றது? பிரமையானது நிருபாதிகமெனவும், சோபாதிகமெனவும் இருவகைப்படும். சங்கைக்கண்டு பசுமையாயிருக்கின்றதென்றன்னுதல் நிருபாதிகப் பிராந்தியாம். ரஜ்ஜு சர்ப்பப் பிராந்தி சோபாதிகமாம். சோபாதிகத்திற்கே சாதிருசியம் அபேக்ஷிக்கப்படும். ஆத்மாவினிடத்து அநாத்மாத்தியாசமும் நிருபாதிகமாம். ஆகலின் அதற்குச் சாதிருசிய மவசியமின்றாம். (கயிற்றினிடத்தும் பாம்பினிடத்தும் நீளமாயிருத்தலாகிய சாதிருசியமுண்டு. அதனால் கயிற்றில் சர்ப்பம் பிராந்தியுண்டாயிற்று. அப்படி ஆத்மாவிற்கும் அநாத்மாவிற்கும் என்ன சாதிருசிய மிருக்கின்றதென்ற வினாவிற்கு விடை இறுக்கப்பட்டது.)

ஆயினும் சிறிது சாதிருசியம் உண்டென்பதைக் காட்டுகிறேன். இந்த ஆத்மா அதி நிர்மலமாயும் சூக்ஷும ரூபமாயும் மிக்க பிரகாசமாயுமிருப்பதாம். அவ்வாறே, சத்துவரூபமானதும் ஆத்மாவின் ஆபாசத்தோடுகூடியதும் பிரகாச வடிவாயுள்ளதும் நிர்மலமானதுமான புத்தியானது, சூரியனெதிரிலுள்ள படிகக்கல் சூரியனைப்போல் பிரகாசிப்பதுபோல, ஆத்மாவின் எதிரில் ஆத்மாவைப்போலப் பிரகாசிக்கின்றது. அதனால் புத்தி ஆத்மாவைப்போல் பிரகாசிக்கின்றது. புத்தியின் சன்னிதானத்தில் மனம் புத்தியைப்போலப் பிரகாசிக்கின்றது. மனத்தின் சன்னிதானத்தால் இந்திரியங்கள் மனத்தைப் போலப் பிரகாசிக்கின்றன. இந்திரியங்களின் சன்னிதானத்தால் சரீரம் இந்திரியங்கள்போலப் பிரகாசிக்கின்றது. அதனால், ஆத்மாவினும் வேறான தேகேந்திரியாதிகளினிடத்து ஆத்மப் பிராந்தியுண்டாயிற்று. சிறுவர் கண்ணாடியிற் காணப்படும் பிரதிபிம்பத்தைக்கண்டு அது வேறொரு குழந்தையென்றெண்ணுவதுபோல மூடர்கள் திருஷ்டிக்கும் புத்தியினிடத்து ஆத்மாவின் அத்தியாசத்திற்குக் காரணமான சாதிருசிய முண்டென்றறியக்கடவாய். (விவேகிகளுக்கு ஆத்மாத்மாக்களினிடத்துச் சாதிருசியமின்றேனும் அவிவேகிகளின் திருஷ்டிக்குச் சாதிருசியமுண்டென்க.)

(கயிற்றைக்கண்டு இது பாம்பு என்று ஒருவன் பிரமிப்பதற்கு அதற்கு முன் அவன் கண்ட பாம்பின் ஸ்மிருதி ரூபமாகிய சம்ஸ்காரம் காரணமாகின்றது. இங்கு அது எவ்வாறாமென்ற வினாவிற்குச் சமாதானம் கூறுகின்றார்.

சம்சாரவடிவ சம்ஸ்காரம் அநாதியாகவே யுள்ளதாகும். மனிதர் நித்திரையினின்றேனும் மூர்ச்சையினின்றேனும் விழித்து எழுந்தவுடன் பிரபஞ்ச

வியாபாரத்தில் பிரவிர்த்திக்கின்றனர். ஆதலால் அஞ்ஞானம் அநாதியாம்; சம்ஸ்காரமும் அநாதியாம் என்பது பெறப்படுகின்றது. இனி,

எந்த அத்தியாசத்தினால் இந்த ஜனனம், மரணம், வியாதி, முதுமை முதலியவற்றா லுண்டாகும் துக்கவடிவ அநர்த்தங்கள் உண்டாயினவோ அத்தகைய அத்தியாசவடிவமாகிய பாதையுண்டாவதற்குக் காரணத்தைக் கூறுகிறேன். அன்புள்ள சீடனே! அமைதியாய்க் கேள்.

ஆத்மாவிற்குப் பாதியாகவுள்ள அவித்தையினிடத்து ஆவரணம், விட்சேபமென்னு மிரண்டு சக்திகளுண்டு. ஆவரணம் தமோகுணத்தின் சக்தியாம். தமமே ஆவரணத்திற்குக் காரணமாகும். உலகை மோகிக்கச்செய்யும் இந்த ஆவரணமே மூலாவித்தை யெனப்படுகின்றது. விவேகியாயினும் மிக்க யுக்தியுடையோனாயினும் ஆன்மசொரூபத்தை யறிவிக்கும் வேதாந்த வாக்கியங்களைச் சிரவணஞ் செய்தவனாயினும் அவனுடைய ஞானக்கண்ணானது இந்த ஆவரண சக்தியால் மறைக்கப்பட்டிருக்குமாயின் அவன் தனது யதார்த்த சொரூபத்தையறிய மாட்டான்.

விக்ஷேப சக்தியானது ரஜோகுணத்தின் சக்தியாகும். பிரபஞ்ச வியாபாரத்தில் ஒருவன் பிரவிர்த்திப்பதற்கு இதுவே காரணமானதாகும். சத்ரூப ஆத்மாவினிடத்தில் அசத்ரூபமாகிய சகல பிரபஞ்சத்தையும் காண்பிப்பதும் இச்சக்தியேயாம். உலக வியவகாரத்திலுள்ளவனை நித்திரையானது தன் வசப்படுத்துவதுபோல, இந்த ஆவரண சக்தியும் உள்ளே விட்சேப சக்தியை விசிரிம்பிக்கச் (வியாபிக்கச்) செய்து கொண்டே அந்தராத்மாவை மறைத்துக் கொள்ளுகிறது. நித்திரையின் வசப்பட்ட காலத்து ஒருவனுக்கு ஜாக்கிராவஸ்தையின் சம்ஸ்காரங்கள் சொப்பனமாகக் காணப்படுவதுபோல, விட்சேபசக்தி பிரபஞ்சத்தைக் காணுமாறு செய்கின்றது. ஆவரணமென்னும் பெயருடைய மகத்தான சக்தியினால் நிர்மலமாகிய ஆத்மசொரூபம் மறைக்கப்படுவதால் புருஷன் அஞ்ஞானத்தினால் சரீராதிகளை யாத்மாவென்று நினைத்து அநாத்மாவினிடத்து ஆத்மபாவத்தை யாரோபிக்கின்றான். எப்படி சொப்பனாவஸ்தையில் பிராதிபாதிக சரீரத்தினிடத்தில் நானென்னும் பாவம் உள்ளதோ அப்படியே இப்புருஷனும அவ்வநாத்மாவின் தர்மங்களாகிய ஜனனம் மரணம் பசிதாகம் முதலானவைகளை ஆத்மாவினிடத்து ஆரோபிக்கிறான்.

விக்ஷேப சக்தியால் தூண்டப்பட்டவனாய் புண்ணியபாவவடிவ கருமங்களைச் செய்கின்றான். மறுபடியும் அக்கர்மபலனை யனுபவிக்கிறான். இவ்வாறே சமுசாரசாகரத்தில் மூழ்கியலைகிறான். எந்த சமுசார பந்தத்தினால் கர்ப்பவாசம் ஜனனம் மரணம் கஷ்டம் பயம் முதலானவைகளினால் மிகுந்த கஷ்டத்தை யடைகின்றானோ அந்த அந்தராத்மாவின் சம்சாரவடிவ பந்தம் அத்தியாச தோஷத்தினால் உண்டானதாகும். இப்பிராந்தியாகிய அத்தியாசமே சம்சாரத்திற்கு மூலகாரணமாகும். ஆத்மசொரூபத்தை உள்ளவாறுணராமையாகிய விபரீதஞானமே சகல அநர்த்தங்களுக்கும் காரணமாகின்றது. அதனாலேயே நீங்காத் துன்பத்திற் கிருப்பிடமாகிய பந்தமுண்டாயிற்று.

(இனி, சம்சாரம் எவ்வாறு நீங்குமென்று கூறுகிறார்)

சம்சாரம் எதனாலுண்டாயிற்று? அத்தியாசத்தினால். ஆதலால் அத்தியாசம் நசித்தால் சம்சாரம் தோன்றுவதில்லை. இதனுண்மையை பெத்த முத்தர்களிடத்திற் காணலாம். ஒருவன் பிரவிர்த்திமார்க்கத்தை யனுசரித்திருப்பானாயின் அவன் பெத்தனென்றும், நிவிர்த்தி மார்க்கத்திலிருப்பானானால் முத்தனென்றும் அறிந்துகொள்ளலாம். ஏனெனில், பிரவிர்த்திமார்க்கமே சம்சாரம்; நிவிர்த்தி மார்க்கமே முக்தி. (தொடரும்.)

*

## தாவரங்களின் அதிசய உருவங்கள்.

சு. வேங்கடசாமி நாயுடு.

உலகில் ஒருகாலத்தில் விலங்கினம் மனிதர்களைப்போல் பேசின எனவும், மனிதர் விலங்கின் வடிவுடனிருந்தாரெனவும், தாவரவர்க்கங்களும் அவ்விதமே மனித உருவுடன் வளர்ந்தன எனவும், மனிதரைப்போல் சப்த மிட்டன எனவும் நமது பழைய கதைகளில் வாசித்திருக்கின்றோம். ஆனால் இதுவரை நாம் கண்ணால் பார்த்ததில்லையல்லவா? பார்த்தபிறகுதான் மேற் சொல்லியவை கட்டுக்கதைகளல்ல என்று கொள்வோம். ஆனால் தற்கால விஞ்ஞான ஆராய்ச்சியில் அநேக அதிசயங்களைக் கண்டு வருகிறோம்? சில தாவரங்களின் வியக்கத்தக்க அற்புதத்தை ஈண்டுக் குறிப்பிடுவாம்.

கீழ்க்கண்ட கிழங்கு வகைகளின் உருவங்களை உற்றுநோக்குங்கள். மனிதருடைய வடிவ அமைப்பிற்கும் அவைகளின் உருவிற்கும் வேற்றுமை



யுண்டா? முதற் படத்திற் கண்ட கிழங்கின் வடிவம் நமது முகத்தைப்போன் றிருக்கிறது. அதன் கீழேயுள்ள கழுத்து புஜம் தோள்கள் கைகள் இடுப்பு கால்கள் முதலியவை செதுக்கி இழைத்து அமைத்த உருவெனத் தோன்றும். இவ்வகைச்செடி ஜெர்மனிதேசத்தில் 'பான்' என்னும் ஊருக்கும் 'ஜாவியர்ஸ்' என்னும் ஊருக்கும் மத்தியிலுள்ள 'வெய்டன்' என்னும் கிராமத்தில் ஒரு தோட்டத்தில் வளர்ந்து வந்தது.

அக்கிழங்கிற்கு மேலுள்ள இலைகளைப் பாருங்கள். அரசர்களும் சீமாட்டி களும் தம் மகுடங்களிற் சூடும் தீப்பறவையின் விலைபெற்ற சிறகுகளைப்

போன்று தோன்றுகின்றன. இலைகளின் கீழுள்ள உருண்டை வடிவான கிழங்கின் உருவத்தை உற்று நோக்குங்கள்! அதில் உள்ள கண்கள் உங்களைப் பார்க்கின்றன. செவிகள் நீங்கள் சொல்வதைக் கேட்கத் தயாராயிருக்கின்றன. மூக்கும், புருவங்களும், அழகிய வாயும் உங்கள் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றன. அதற்குக் கீழே அமைந்துள்ள உறுப்புக்களைப் பார்க்கும்பொழுது மனிதருடைய கால்களும் கைகளுமே என்ற நினைவைத் தவிர, பின்னிக்கொண்டிருக்கும் வேர்களென்று எண்ண இடமுண்டா?

இரண்டாவது படத்தைக் கவனியுங்கள். இது 'ஹார்லெம்' என்னும் ஊரில் சாதாரணமாகப் பயிரிடப்பட்டுவந்தது. அச்செடியின் இலைகளுக்குக் கீழேயுள்ள கிழங்கில் விரல்களின் அமைப்புமட்டுமல்லாது, நகங்களின் தோற்றத்தையும், ஒரு விரலுக்கொருவிரல் குறுகி நமது கைபோல் விளங்குவதையுங் காணலாம். இம்மட்டோ! அதன் விரல்களும் உள்ளங்கையும், சுருங்கல்களையும் இரேகைகளையும் கொண்டிருப்பதை நோக்குங்கள்.

மூன்றாவது படத்தில் 'பீட்ரூட்' என்னும் கிழங்கைப்போன்று தோன்றுகிறது. இதைப் 'பார்ஸ்னிப்' என்று சொல்லுவார்கள். கிழங்கைப் பிடித்திருப்பது இயற்கையான கையெனத் தோன்றும். இக்கிழங்கை மூதன் முதலில், ஒருபெண் ஒரு சந்தையில் விற்றுக்கொண்டிருந்தாள். இதன் அற்புத உருவத்தைப் பிறகு ஒவ்வொருவரும் பார்த்து வியந்துகொண்டிருந்தார்கள். கடைசியாக ஒரு சித்திரமெழுதுவோன் பார்த்து அதைப் படமாக எழுதிப் பிரசுரித்தான். இதே 'பார்ஸ்னிப்' என்னும் இன்னொரு கிழங்கு மனித உருவைப்போலிருந்தது என ஒருவர் சொல்லுகின்றார். ஆனால் அவ்வதிசயப்படம் நமக்கு எங்கும் இதுவரை கிடைக்கவில்லை.

## அற்புத மரம்.

யுகாந்தகாலம்வரை உயர்ந்தோங்கும் பாம்பின் உருவத்தையுடைய மரத்தின்படம் இங்கு வரைய ஏதுவில்லாமல் அதன் சரித்திரத்தைமட்டும் சொல்லுகின்றோம். 'போர்டோ சாண்டோ' என்னும் இடத்திலிருந்து 'டெனிரீப்' என்னும் மலையுச்சிக்குச் செல்லும் வழியில் 'ஓடாவோ' என்னும் நகரம் ஒன்றிருக்கிறது. முற்காலத்தில் அந்நகர் 'கான்சஸ்' என்பவருடைய தேசத்திற்குத் தலைநகராக இருந்தது. அந்நகரில் நெடுநாட்களாக வளர்ந்துவந்த மரம் ஒன்றிருந்தது. 'ஹெம்பல்ட்' என்பவர் அம்மரத்திற்குச் சுமார் 5000 அல்லது 6000-ம் வருட ஆயுளிருக்கலாமென நிர்ணயித்தார். ஸர்ஜான் ஹெர்ஷல் என்பவர் அதை உலகத்திலேயே வயது முதிர்ந்த மரமென்றார். மக்கட் தோற்றத்திற்கும் முற்பட்டதென இன்னும் பலர் சொல்வார்கள்.

மேற்சொன்ன 'கான்சஸ்' ஜாதியார் இம்மரத்தைத் தமது கோயிலாக வைத்துக்கொண்டார்கள். ஏனெனில் இது ஒரு பெரிய பாம்புவடிவைக் கொண்டிருந்தது. அடிமரத்தின் சுருண்டவடிவு மிகவும் பெரியது. கிளை

களும் அதன் தழைகளும் ஆதிசேடனுடைய தலைகளைப்போலிருந்தால் யார் தான் அக்காலத்தில் தெய்வமாக நினைக்கமாட்டார்கள்?

அவர்களுக்குப்பின் மூன்றாவது நூற்றாண்டின் இறுதியில் வசித்த 'வாண்டெல்' வகுப்பினரும் அவ்விதமே அம்மரத்தைப் போற்றி வந்தார்கள். 15-வது நூற்றாண்டில் அவ்விடத்திற்குச் சென்ற போர்ச்சுகீஸ் தேசத்தாரும் அம்மரத்தை ஏசுநாதருடைய இருப்பிடம் என வைத்துக்கொண்டார்கள். தேவனைப் பூசிப்பதும் அம்மரத்தடியிலேயே. அது பார்ப்பதற்கு அவ்வளவு அதிசயத்தைக் கொடுத்தது! 19-ம் நூற்றாண்டின் ஆரம்பத்தில்தான் எக் காரணத்தாலோ அதன் நீண்ட கிளையொன்று ஒடிந்து விழுந்தது. இதி லிருந்து அம்மரம் க்ஷீணதசையை அடைந்தது. 1867-ல் உண்டான ஒரு பெரிய சண்டமாருதக் காற்றால் அம்மரம் அடியோடு விழுந்து அழிந்தது.

இவ்வினத்தைச்சேர்ந்த இளஞ்செடிகள் சிறுசிறு கிளைகளுடன் வளர் கின்றன. கிளைகள் ஒன்றற்கொன்று நீளத்தில் சமமாக இருக்கின்றன. இலை கள் கெட்டியாகவும் உருண்டைவடிவாகவும் இருக்கின்றன. விதையிலிருந்து தோன்றி இச்செடிகளாக வளாவதற்கு 20-ஆண்டுகளாகும். இக்காலம்வரை உயர்ந்து கிளைகளில்லாமல் வளருமேயொழிய அதில் மலர்களையும் கனிகளை யும் காணமுடியாது. இருபது ஆண்டுகளுக்குப் பிறகுதான் மலர ஆரம்பிக் கும். இதுவரை கிளைகளில்லாமல் இருந்து, அது புஷ்பிக்கத் தொடங் கியதும் மூன்று கிளைகள் பிரியும். இம்மரம் இவ்விதமாகவே இருப தாண்டுக் கொருமுறைதான் புஷ்பிக்கத் தொடங்கும். மலர்ந்த உடனே ஒவ் வொரு கிளையிலிருந்து மும்மூன்று கிளைகள் பிரியும். இக்கிளைகளில் பூக்கள் கொத்துக் கொத்தாகத் தொங்கும். சிலநாட்கள் கழிந்தபின்பு பேரிக்காய் கள் போன்ற கனிகளாகும். காலாந்தரத்தில் மரம் பெரிதாவதுடன் கிளை களுக்குள் எண்ணிறந்த கிளைகளுண்டாகிச் சடைசடையாகக் கீழே தொங்கி வளரும். இதைப் பார்க்க விநோதமா யிருக்கும்.

இன்னும் அநேக அற்புத உருவங்களைக்கொண்ட தாவரவர்க்கங்களிருக் கின்றன. அவைகளின் வடிவங்கள் மட்டுமல்ல; அவற்றின் வளர்ச்சியும் உணர்ச்சியும் பார்க்கப் பார்க்க அற்புதமாயிருக்கும்.

இவ்விஷயங்களில் ஆராய்ச்சிபெற்று நமக்கும் உலகத்துக்கும் இவ் வகைக்கல்வி அமுதூட்டும பேராசிரியர் ஜே. சி. போஸ் முதலியோர் நமது நாட்டில் பிறக்க நாம் பெரும் புண்ணியம் பெற்றோமன்றோ!

## இன்பம் சித்திக்க ஆறு வாயில்கள்.

1. உடல் நலம் பேணல்.
2. ஊருடன் கூடிவாழும் உயர்ந்த நற்குணங்களுடைமை.
3. பெரியார் அறிவுரை போற்றிக் கேட்டல்.
4. அறிவு நூற் கல்விப் பேறு.
5. நேர்மை கடைப்பிடியாக வாழ்க்கை நடத்தல்.
6. சோர்வற்ற தீவிர முயற்சி.




(137-ம் பக்கத் தொடர்ச்சி.)

## உலக ஞானம்.

(சிவானந்தசாகர யோகீஸ்வரர்.)

ஆகையால் இவைகளை யோசித்த பிறகுதான் ஒரு காரியத்தைச் செய்ய வேண்டும். திடீரென்று ஒன்றும் செய்யக்கூடாது. ஒரு காரியத்தைச் செய்யத் தொடங்குகிறவன் முதலில் தன்னுடைய சக்தி, காரியத்தின் சுபாவம், பல சித்தி இவைகளை யோசித்துப் பின் அதைச் செய்யவாவது விடவாவது வேண்டும். இராஜ்யத்தின் அளவு, இலாபம், நஷ்டம், பொக்கிஷம், குடிகள், தண்டனை இவைகளை அறியாத அரசன் தன் இராஜ்யத்தை நெடுங்காலம் வைத்திருக்க மாட்டான். சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட தருமாதருமங்களுக்குரிய அறிவாதியவைகளை யுடையவன் தன் இராஜ்யத்தில் நெடுங்காலம் நிலைபெற் றிருப்பான். அரசன் இராஜ்யம் தன்னுடையதென்று நினைத்துக்கொண்டு ஒழுங்கீனமாய் நடக்கக்கூடாது. எல்லைக்குமேல் மூப்பானது அழகை அழிப்பதுபோலக் கொடுங்கோன்மை அரசனுடைய வாழ்வை அழித்துவிடும். ஒரு மீன் தூண்டிலில் கோக்கப்பட்ட மாமிசத்தை விழுங்குகிறது. அந்த மாமிசத்தின் நிலைமையை யாவது அதனாலுண்டாகும் பயனையாவது யோசிப்ப தில்லை. தன் க்ஷேமத்தை விரும்புகிறவன் எதை யெடுத்துக்கொள்ள வேண்டுமோ அதையே விரும்பவேண்டும். அப்படி எடுத்துக் கொண்டதும் ஜீரணிக்க வேண்டும். அப்படிச் செய்தால் க்ஷேமத்தை அடையலாம். பழுக்காத காய்களை மரத்திலிருந்து பறிக்கிறவன் அதனுடைய இரசத்தை அனுபவிப்பதில்லை. அதன் விரையையும் நாசம்பண்ணுகிறான். சரியான காலத்தில் நன்றாய்ப் பழுத்த பழத்தைப் பறிக்கிறவன் அதன் இரசத்தை அனுபவிக்கிறதும் தவிர மேலே பழங்களை விருத்திசெய்வதற்குரிய விரைகளையும் அடைகிறான். தேனீயானது புஷ்பத்தைக் கெடுக்காமல் அதன் தேனை மாத்திரம் குடிப்பதுபோல அரசனும் குடிகளை வருத்தப்படுத்தாமல் வரிப் பணத்தை வாங்கவேண்டும். பூஞ்செடியை வேருடன் பறியாமல் அதன் புஷ்பத்தைமாத்திரம் பறித்துக்கொள்ளவேண்டும். கரி வியாபாரம் செய்கிறவர்களைப்போல வேருடன் பறிக்கக்கூடாது. இதைச் செய்தால் நமக்கு என்ன நேரிடும்? செய்யாவிட்டால் என்ன வரும்? என்பதை நன்றாய் யோசித்துக் கொண்டபின் ஒருவன் அந்தக் காரியத்தைச் செய்யவாவது விடவாவது வேண்டும். மனிதப்பிரயத்தனத்தால் பயன்படாதென்று தெரியவருகிறதை ஒரு போதும் செய்யக்கூடாது. ஆண்மையில்லாத புருஷனை ஒரு பெண்

தனக்கு நாயகனாக விரும்பாமலிருக்கிறதுபோலக் கோபமுள்ளவனும் தயவில்லாதவனுமான ஒருவனை ஜனங்கள் தங்களுக்கு அரசனாகக்கொள்ள விரும்பமாட்டார்கள். சிறிய முயற்சியால் பெரிய லாபம் வருவதாயிருந்தால் புத்திசாலியானவன் உடனே அதைச் செய்ய வேண்டும். தாமதிக்கக் கூடாது. எந்த அரசன் உண்மையுள்ளவனாயும், எல்லாரிடத்தும் அன்புள்ளவனாயும் இருக்கிறானோ அவன் சும்மா இருந்தாலும் பிரஜைகள் அவனை நேசிப்பார்கள். மரம் கனி கொடாததாயிருந்தாலும் நிரம்பப் பூத்திருக்கவேண்டும். கனிகொடுப்பதாயிருந்தாலும் தன்மேல் ஏறமுடியாததா யிருக்கவேண்டும். பழுக்காமலிருந்தாலும் பழுத்திருப்பதுபோலத் தோன்றவேண்டும் இவைகளைப்போலிருக்கிற அரசன் ஒருபோதும் கெடமாட்டான்.

மனம், வார்த்தை, கண்கள், செய்கை ஆகிய இந்த நாலுவகையாலும் எல்லாரையும் பிரியப்படுத்துகிறவனை ஜனங்கள் எப்போதும் நேசிக்கிறார்கள். மிருகங்களை வேட்டையாடுகிற வேடன் அவைகளைப் பயமுறுத்துகிறதுபோல எல்லாருக்கும் அரசன், கடல்சூழ்ந்த பூமிமுழுமையும் ஜயித்தபோதிலும், தன் நிலைமையினின்றும் நழுவிவிடுவான். பெருங்காற்றானது மேகங்களைச் சிதற அடிக்கிறதுபோலத் துர்செய்கையுள்ளவன் தன் பிதிரார்ஜித சொத்துக்களைத் தானே போக்கடித்துக்கொள்கிறான். நெடுங்காலமாக மனிதர்களால் அனுஷ்டிக்கப்பட்டு வருகிற தருமங்களைத் தவறாமல் கைப்பற்றிக்கொண்டு நடக்கிறவனுக்குப் பூமியானது ஐசுவரியத்தையும் பெருவாழ்வையும் கொடுக்கிறது. தருமத்தையும் நீதியையும் கைவிட்டுவிடுகிறவனை, நெருப்பானது தோலைத் தகிக்கிறது போலப் பூமியானது தரித்திரத்துக் குள்ளாக்கி வருத்துகிறது. பகை மன்னருடைய நாட்டை வருத்துகிறதை விடத் தன் நாட்டைப் பாதுகாப்பது நல்லது. தருமமாகவே இராஜ்யத்தை அடைய வேண்டும்; தருமமாகவே பரிபாலிக்க வேண்டும். தருமத்தை ஆதாரமாகவுடைய வாழ்வு ஒருபோதும் தாழ்வடைவதில்லை. உடையவனும் தன்வாழ்வை இழந்துவிடமாட்டான். பைத்தியங்கொண்டவன் கூவுகிறதிலும், குழந்தைகளின் மழலைச் சொற்களிலும் இன்பம் காண்பதுபோலவும் கல்லிலிருந்து தங்கத்தை எடுப்பதுபோலவும் உண்மையைக் கிரகிக்க வேண்டும். பயிர்த்தொழில் செய்கிறவன் வயல்களிலிருந்து தானியங்களைச் சேகரிப்பதுபோலப் புத்திசாலியானவன் நல்ல ஒழுக்கங்களையும், நல்ல வசனங்களையும் நாலாபக்கங்களிலிருந்தும் தெரிந்துகொள்ளவேண்டும். பசுக்கள் மணத்தால் பொருள்களை யறிகின்றன. வேதியர்கள் வேதத்தால் அறிகிறார்கள். அரசர்கள் தூதர்களால் அறிகிறார்கள். மற்றவர்கள் கண்களால் காண்கிறார்கள். பாற்கறக்க முடியாமலிருக்கிற பசு மிகவும் வருத்தப்படுகிறது. எளிதாகக் கறக்கக்கூடிய பசு வருந்துகிறதில்லை. சுடவேண்டாமல் வளைகிற பொருள்கள் சுடப்படுகிறதில்லை. எளிதில் வளையக்கூடிய கழிகள் பலாத்காரத்தால் கஷ்டப்படுத்தி வளைக்கப்படுகிறதில்லை. புத்திசாலியானவன் இப்படித் தன்னை விடப் பலசாலியான அரசனுக்கு வணங்கியிருக்கவேண்டும். பலசாலிக்கு

முன் வணங்கியிருக்கிறவன் இந்திரனையே வணங்குகிறவனாகிறான். ஜீவப் பிராணிகள் மழையால் ஜீவிக்கின்றன. ஸ்திரீகள் தங்களைக் காப்பாற்றுகிற கணவர்களால் பிரகாசிக்கிறார்கள். பிராமணர்கள் வேதத்தால் விளங்குகிறார்கள். தருமம் சத்தியத்தால் காக்கப்படுகிறது. உபயோகப்படுத்துவதார் கல்வி விருத்தியாகின்றது. சரீர சுகத்தால் அழகு பிரகாசிக்கிறது. உய குலம் நல்ல ஒழுக்கத்தால் விளங்குகிறது. தானியம் அளவையால் பரிபாலிக்கப்படுகின்றது. குதிரை பழக்கத்தால் சிறப்படைகிறது. இடைவிடாத கவனிப்பினால் பசு மேன்மையடைகின்றது. கந்தை வஸ்திரத்தினால் ஸ்திரீகள் தாழ்வடைகிறதுபோல இழிகுலமானது கெட்டநடக்கையால் வருவதே. இழிந்தகுலத்தில பிறந்தவர்களானாலும் நல்ல நடக்கையுள்ளவர்களாயிருந்தால் எல்லாராலும் மதிக்கப்படுவார்கள்.

பிறருடைய செல்வம், அழகு, வல்லமை, உயர்குல வாழ்வு, அதிர்ஷ்டம், பெருமை இவைகளைக்கண்டு பொறாமை அடைகிறவன் தீராத வியாதி கொண்டவனைப்போல வருந்துகிறான். கெட்ட செய்கைகளைச் செய்வதற்கு அஞ்சுகிறவனும், நல்ல செய்கைகளை விடுகிறதற்குப் பயப்படுகிறவனும், தான் உத்தேசித்த காரியங்களை அவை முடிகிறதற்குமுன் வெளியிடப் பயப்படுகிறவனும் ஒருபோதும் துக்கமடையமாட்டான். அற்ப புத்தியுள்ளவர்கள் கல்வியாலும், செல்வத்தாலும், துணைவலியாலும் இறுமாப்பு அடைகிறார்கள். நல்லவர் அவர்களைத் தடுத்தாலும் கவனிக்கமாட்டார்கள். தாமிஷ்டர்கள் தம்மிடம்வந்து ஏதாவது உதவிகேட்டால் அறிவீனர்கள் அற்ப உதவியைச் செய்துவிட்டுத் தங்களை மஹா தார்மிஷ்டர்களாகவே எண்ணிக்கொண்டு இறுமாப்பு அடைவார்கள். உலகமெல்லாம் தங்களை அதார்மிகள் என்று இகழ்வதை அவர்கள் அறிவதில்லை. உண்மையில் நீதிமான்களுக்கு நீதிமான்களே உதவியாவார்கள். இந்திரிய நிக்கிரகம்செய்த மஹாத்மாக்களுக்கும், மஹா துஷ்டர்களுக்கும் கூடத் தார்மிஷ்டர்களே உதவியாவார்கள். துஷ்டர்கள் நீதிமான்களுக்கு ஒருபோதும் ஆதரவாவதில்லை. உயர்ந்த ஆடையால் அலங்கரித்துக்கொண்டிருக்கிறவர்கள் ஒருசபையை மேற்கொள்கிறார்கள். பசுவையுடையவன் இனிய பதார்த்தங்களை உண்பதை வெல்கிறான். வாகனத்தையுடையவன் வழியை வெல்கிறான். நல்லநடக்கையையுடையவன் எல்லாவற்றையும் வெல்கிறான். நல்லொழுக்கமே மனிதனுக்குச் சாரமாயுள்ளது. அதை இழந்தவன் செல்வத்தையும் நண்பர்களையும் இழக்கிறான். ஏ பாரதோத்தமா! தனவான்களுடைய போஜனத்தில் மாமிசமே சிறப்படைகிறது. நடுத்தரமானவர்களுடைய போஜனத்தில் நெய் சிறப்படைகிறது. ஏழைகளுடைய போஜனத்தில் எண்ணெய் மேன்மையுடையது. எளியவர் போஜனமே மிகுந்த சுவையுள்ளது. ஏனென்றால் ஐசுவரியவான்களிடத்தில் அரிதாயிருக்கிற பசியே போஜனத்துக்குச் சுவை கொடுப்பது. இவ்வுலகில் வாழ்வையுடையவர்கள் சரியான அளவு புஜிக்கிறதில்லை. எளியவர்களோ மரத்துண்டுகளையும் ஜீரணமாக்கிக்கொள்கிறார்கள். தாழ்ந்த வகுப்பு ஜனங்கள் தங்கள் ஜீவனத்துக்குண்டாகும் கெடுதிக்கு அஞ்சுவார்கள். நடுவகுப்பார் மரணத்துக்குப் பயப்படுவார்கள். நல்லவர்கள் அவமானத்துக்குப் பயப்படுவார்கள். செல்வ மயக்கமானது சாராய மயக்கத்தைவிட மேலானது. ஏனென்றால் செல்வமுள்ளவன் அதையிழந்தாலன்றிப் புத்தி அடைகிறதில்லை. நட்சத்திரங்கள் கிரகங்களால் இழுக்கப்படுவதுபோல இந்த உலகம் அறிவுள்ள புலன்களால் வழிகாட்டி நடத்தப்படுகிறது. இந்திரியங்களால் மேற்கொள்ளப்பட்டுக் காரியங்களை நடத்துகிறவனுக்குப் பூர்வபட்ச சந்திரனைப்போலத் துன்பமும் துக்கமும் விருத்தியாகின்றன.

முதலில் தன்னை அடக்கிக்கொள்ளாமல் தன் மந்திரிகளையும், புத்தி சொல்கிறவர்களையும், பகைவர்களையும் அடக்க விரும்புகிறவன் தன்பலமிழந்து இழிவடைவான். புலன்களையே சத்துருக்களாக எண்ணி அவற்றை முதலில் அடக்குகிறவன் தன் மந்திரிகளை அடக்கவும் பகைவர்களை வெல்லவும் தவறுதலடையமாட்டான். தன்புலனை அடக்கினவனும், நீதியாய் நடக்கிறவனும், கோபிக்கிறவர்களைத் தண்டிக்கிறவனும், தான் அடங்கி நடக்கிறவனும், பொறுமை யுடையவனும் எவனோ அவனைப் பாக்கியங்கள் தாமாகவே வந்தடைகின்றன. மஹாராஜனே! ஒருவனுடைய சரீரமே இரதம்; அதிலிருக்கிற ஆத்மாவே சாரதி. ஐம்புலன்களும் அதில் பூட்டப்பட்ட குதிரைகள். அந்தக் குதிரைகள் நன்றாய்ப் பழக்கப்பட்டிருந்தால் அவைகள் அந்தத் தேரை நன்றாய் இழுத்துக்கொண்டு செல்லும். ஆகையால் புத்திசாலியானவன் அப்படிப்பட்ட தேரிலேறிக்கொண்டு சுகமாய்ப் பிரயாணம் செய்வான். அவன் எப்போதும் ஜாக்கிரதையாயும் சமாதானமாயும் இருப்பான். நன்றாய்ப் பழக்கப்படாததும், அடக்க முடியாததும், சாமர்த்தியமற்ற சாரதியால் நடத்தப்படுபவையுமான குதிரைகள் நடக்கிற வழியில் நாசத்தை யுண்டாக்குகின்றன. அதுபோல் இந்திரியங்களை அடக்கிக்கொள்ளாதவன் நாசத்தை அடைவான். பழக்கமில்லாத ஒருவன் தன் புலன்களால் நடத்தப்பட்டு, நன்மையினின்று தீமையையும், தீமையினின்று நன்மையையும் கிரகிக்க முயன்று சுகதுக்கங்களைக் கலக்குகிறான். தருமார்த்தங்களைவிட்டு நடக்கிறவன் தன்வாழ்வையும், மனைவியையும் ஜீவனையும் இழந்து விடுவான். செல்வத்துக்கு மாத்திரம் அதிகாரியாய்ப் புலன்களுக்கு அதிகாரியாகாமலிருக்கிறவன் புலன்களை அடக்கியாளும் திறமையில்லாமையால் தன் செல்வத்தை நிச்சயமாய் இழந்துவிடுவான். மனம், புலன், புத்தி இவைகளை அடக்கித் தானே தன்னை ஆராய்ந்து தேடவேண்டும். தேடி யறியவும் வேண்டும். ஏனென்றால் ஒருவன் தானே தனக்குச் சத்துருவும் சினேகிதனுமாயிருக்கிறான். தன்னைத்தானே அடக்கிக்கொள்கிறவன் தனக்குத்தானே சினேகிதனாகிறான், தன்னை அடக்கிக்கொள்ளாதவன் தனக்குத்தானே சத்துருவாகிறான். ஒரு பெரிய மீனானது மெல்லிய நூலைக் கிழித்துவிடுவதுபோல விருப்பத்தையும் கோபத்தையும் அறிவால் அழித்துவிட வேண்டும். இவ்வுலகத்தில் தருமத்தையும் அருத்தத்தையும் மதிக்கிறவன், சித்திபெறும் மார்க்கத்தை யுணர்ந்து, பாக்கியத்தையும் தான் விரும்பின எல்லாவற்றையும் பெறுகிறான். எண்ணத்துக்கு மூலமான ஐந்து புலன்களையும் அடக்காமல் மற்றப்பகைகளை அடக்க முயல்கிறவன் தன பகைவர்களால் வெல்லப்படுவான். துர் எண்ணமுள்ள அரசர்கள் புலன்களை அடக்கிக்கொள்ளச் சக்தியில்லாமையால், இராஜ்ய மதத்தால் பிழைகளைச் செய்து அழிந்து போனதாகத் தெரியவருகிறது. உலர்ந்த கட்டையுடன்கூடின பச்சைக்கட்டையும் எரிக்கப்படுவதுபோலப் பாபமற்றவனும் பாபியுடன் கூடுவதால் தண்டிக்கப்படுகிறான். ஆகையால் பாபியின் சினேகத்தை ஒழித்துவிட வேண்டும். வெவ்வேறான ஐந்து விஷயங்களைக் கிரகிக்கிறவைகளும், பகையுமான ஐந்து புலன்களை எவன் அடக்காமலிருக்கிறானோ அவன் துக்கத்தால் ஜயிக்கப்படுவான். கபடமின்மை, நேர்மை, பரிசுத்தம், திருப்தி, இனிய பேச்சு, தன்னடக்கம், சத்தியம் உறுதி இவ்விலக்கணங்கள் துஷ்டர்களிடத்தில் காணப்படுவதில்லை.

---

**சந்தாதாரர்களுக்கு:**—சந்தா நம்பர் தெரியாதவர்கள் மாதமாதம் வரும் சஞ்சிகையின் மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.

# ஆரம்பக் கல்வியும் அதன் மேலதிகாரிகளும்.

P. பரிமணப் பல்லவராயர், ஆசிரியர்.

ஆரம்பக்கல்வியின் அஸ்திவாரகர்களாகிய ஆரம்ப ஆசிரியர்களில் "லோயர் கிரேட் உபாத்திமார் எவ்விதத்திலும் ஹையர்கிரேட் உபாத்திமாராக வழித்தமக்கொள்ளாவிட்டால் அவர்கள் உபாத்திமைத் தொழிலையே விட்டுவிடும்படியான நிர்ப்பந்தம் ஏற்படும்போல் தோன்றுகிறது" என, ஆரம்பாசிரியர்களுக்காகத் திருச்சி ஆர். வி. போதனாமுறைப் பாடசாலையினின்று மாதந்தோறும் ஒரு ரூபாச் சந்தாவில் வெளிவரும் "போதனா விஷயப் பூங்கொத்து" செப்டம்பர்மாத இதழில் அதன் பத்திராதிபர் அறிவித்திருக்கிறார்கள். அந்நிர்ப்பந்தம் ஏற்படுத்தும் அதிகாரியே அவ்வழியையுங் கூறவேண்டியதுதான் முறையாகும். இல்லையேல் இது முறை தவறிய வழியே — யோசனையே — காரியமே — செய்கையே யாகுமென்பதில் ஐயமில்லை. இது, ஒருவனை வேலைக்கமர்த்தி, சாகுபடியே இல்லாத ஒரு நிலத்தினைச் சாகுபடிக்குத் தகுதியானதாய்ச் சீர்திருத்தச்செய்து, அப்படிச் செய்தபின், சாகுபடிசெய்ய ஆரம்பிக்கையில் நீ வேண்டாம் போ எனின், கஷ்டப்பட்டு உழைப்பவன் ஒருவன், அதன் ஊதியத்தை அடைபவன் வேறொருவனாக ஆவதுபோலன்றோ இருக்கின்றது? இப்படிச் செய்வது எவ்விதத்திலும் நியாயமே ஆகாது.

1910-முதல் 1914-வரை முடிந்த வருஷங்களில் லோயர், ஹையர் இரு கிரேடிற்கும் டெக்ஸ்ட் புக் முதலிய எல்லாப் பாடங்களையும் வித்தியாசமில்லாமற் கற்பித்து, பரீட்சையிலும் வித்தியாசமில்லாமல் ஒரே விதமாகவே பரீட்சிக்கப்பெற்று, சர்ட்டிபிகேட்டும் வித்தியாசமில்லாமல் "எலிமெண்டரி கிரேடு" என்று பெற்று, பொதுப் (சாதாரண) படிப்பில் லோயர் கிரேடாயுள்ள ஆசிரியர்கள் இதுவரையில் எவ்வளவோ காடியாய்க் கதறியும் கவனியாமல் வித்தியாசப்படுத்தி வந்ததுபோல் இனியும் நடத்த-நிர்ப்பந்தப்படுத்தப் போகிறார்களா? அல்லது அந்த சர்ட்டிபிக்கேட்டுக்கு மதிப்புக் கொடுத்து, சாதாரணப் பரீட்சையில் லோயர் கிரேடாயிருந்தாலும் ஹையர் கிரேடாகவே பாவித்து நடத்தி அவர்களது அரிய சர்ட்டிபிகேட்டு (யோக்கியதாபத்திரத்து) க்கு, அவர்களே யோக்கியதை (மதிப்பு) கொடுக்கப் போகிறார்களா என்பது தெரியவேண்டும். இல்லையேல் அந்த யோக்கியதா பத்திரம்—சர்ட்டிபிகேட்டு எத்தன்மையான மதிப்புடையதென்று அறிவாளர்களே அறிந்துகொள்ளவேண்டியதுதான். அந்த யோக்கியதா பத்திரத்தை அதிகாரிகள் வெறுங் காகிதமாக—மதிப்பின்றிச் செய்யமாட்டார்களென்றே எண்ணுகின்றோம்.

இரு கிரேடிற்கும் ஒரேவித பரீட்சையாயினும், விடைகளை இருபாலாரிடத்திருந்தும் ஏற்றத்தாழ்வாய்க் கவனித்துத்தான் மார்க்குகள் கொடுத்து சர்டிபிகேட்டுங் கொடுத்திருப்பார்களென ஒரு சிலர் உரைக்கலாம். இது எவ்விதத்திலும் பொருந்தாதென்பது திண்ணம். இது, ஒரு விருந்தில்-ஒரே பந்தியில் பிரபுக்களின் இலைகளுக்கு ஒரு மாதிரியும், மற்றவர்களின் இலைகளுக்கு ஒருமாதிரியும் பரிமாறப்பெறும் என்னுங் கூற்றினையே நிகர்க்கும். "ஹையர் கிரேடு ஆசிரியரனைவரும் திறமையுடன் திகழ்வரென்றாவது, லோயர் கிரேடு பயின்ற ஆசிரிய ரனைவரும் திறமையின்றித் திகைப்பரென்றாவது தெளிவாய்க்கூறல் இயலாது" எனக் கூறும் மேலே கூறிய தாய்ப்பாடசாலையின்

தலைமைக்கு அடுத்த தகைமை பொருந்திய ஆசிரியராம் திருவாளர் T. S. கண பதி அய்யரவர்களின் அரியவுரையொன்றே மேலே கூறியவற்றிற்கும், லோயர் கிரேடு ஆசிரிய ரனைவரையும் ஒருங்கே நிறுத்திவிடுவதென்பதற்கும் போதிய அறிவுறுத்தலாகும்.

மேலே, குறிப்பிட்ட வருஷங்களுக்கு முன்னும் பின்னும் பயின்ற லோயர் கிரேடு ஆசிரியர்களை உடனே நின்றுவிடும்படி நிர்ப்பந்திப்பதைவிட, லோயர் கிரேடு பயிற்சியை நிறுத்தி ஹையர் கிரேடு பயிற்சியை விருத்தி பண்ணி, லோயர் கிரேடு ஆசிரியர்களை அவர்களது சர்வீஸின் முடிவி லிருந்து விலகும் வகையில் குறைந்துவருவதைக்கொண்டு காலப்போக்கில் குறைத்து வருதலே சாலச் சிறந்ததும், அறிவாளிகளின் கடமையும், பெருந் தன்மையும், கிரமமும் ஆகும் எனின் மிகையாகாது.

லோயர் கிரேடை—பயிற்சியையே எடுத்துவிடுவதென்பது, பெரும் பான்மையான பாடசாலைகளையுடைய கிராமாந்தரங்களின் ஆரம்பக்கல்விக்கு இயற்றும் பெருத்த இடையூறே என்போம். இதனை அநுபவத்தில் கண் டிருக்கலாம்—காணலாம். கிராமாந்தர ஜனங்களோடு கலந்து அவர்களது மனப்பான்மைக் கேற்ப நடப்பவர் பெரும்பாலும் லோயர் கிரேடு ஆசிரியரே யாவர். சிறுபான்மை ஹையர் கிரேடு ஆசிரியரே அவ்வித மிருப்பர். பெரும் பான்மையான ஹையர் கிரேடு ஆசிரியர்கள், தாங்கள், கிராமாந்திரவாசிகளை விட அதிகக் கல்வி கற்றவர்களென்ற பெரும் மதிப்பை உடையவர்களாய்ச் சற்றுக்கலந்து உறவாடப் பின்வாங்குவார்களென்பது, "தற்போதில் லோயர் கிரேட் ஆசிரியரோடு உழைக்கும் ஹையர் கிரேடு உடன் ஆசிரியர்கள் கிராமப் பாடசாலைகள் மட்டில் அதிக திருப்தியோடும் திறனுடனும் ஊக்கத்தோடும் வேலைசெய்கிறார்களென ருசுவாகிவிட்டதாகத் தெரியவில்லை. கேள்விப் படவுமில்லை" எனக் கூறும் மேற்குறிப்பிட்ட ஆசிரியரவர்களது அரியவுரையி லிருந்தும் இனிது விளங்கும். இதன் உண்மை கிராமாந்தரப் பழக்கம் உள்ளவர்களுக்கே — அநுபவமுள்ளவர்களுக்கே — விசாரித்தவர்களுக்கே— விசாரிப்பவர்களுக்கே நன்கு விளங்கும். குறிப்பிட்ட ஆசிரியரவர்களோ வருடந்தோறும் புதுப்புது ஆசிரிய மாணவர்களோடு கலந்து உறவாடுபவர்— பழகுபவர் — கிராமாந்தர விஷயங்களை விசாரிப்பவராவர். இதினின்றும், ஹையர் கிரேடைச் சேர்ந்த என் சகோதர ஆசிரியர்களைக் குறைகூற வேண்டுமெனபது எனக்கும் மேலே குறிப்பிட்ட போதகாசிரிய ரவர்களுக் கும் ஒரு சிறிதும் எண்ணமில்லை யென்பது திண்ணம்—உண்மையாகும். அவரும் ஓர் உயர்தர ஆசிரியரே என்பதும், தன்னையொத்த—அடுத்த ஆசிரி யரை உயர்நிலைமைக்குக் கொண்டுவரவேண்டும் என்ற எண்ணமுடையவர்; பெரும்பாலும் கிறிஸ்தவ சகோதர ஆசிரிய மாணவர்களுக்கும்—அதிலும் ஆதிதிராவிட ஆசிரியமாணவர்களுக்கும் ஆசிரியராயுள்ளவர்; இவர்களையும் உயர்வுக்குக் கொண்டுவரவேண்டுமென்ற எண்ணமுடையவர் என்பதும் இங்கு கவனிக்கத்தக்கது. 'உள்ளதைச் சொன்னால், நொள்ளைக்கண்ண னுக்கு கோபமாம்' என்பதற் கிணங்க ஆத்திரப்படாமல், 'பொறுமை கட லினும் பெரிது' என்பதற் கொப்ப உண்மையை உணர்ந்தும், இங்குக் கூறிய வற்றிற் கொப்ப இயங்குவோர் இவைகளை இனியேனும் அகற்றி நாட்டின் நன்மைக் கேற்றவாறு விளங்குமாறு வேண்டுகின்றேன். லோயர் கிரேடி லும் கவனிப்பில்லாத ஆசிரியர் இல்லாமலில்லை. ஒரு சிலர் இருக்கவே இருப் பர் என்பதையும் ஒப்புக்கொண்டு, அவர்களுக்கும் இவ்வேண்டுகோளைச் சமர்ப்பிக்கிறேன்.

ஆகவே, இங்குக் கூறியவை எல்லா ஹையர் கிரேடு ஆசிரியர்களையுமாவது, நகர்ப்புறத்து ஹையர் கிரேடு ஆசிரியர்களையுமாவது பொறுத்ததல்லவென்பதை ஞாபகப்படுத்த விரும்புகிறேன். கிராமாந்தர ஹையர் கிரேடு ஆசிரியர்களிலும், லோயர் கிரேடு ஆசிரியர்களைப்போல் உழைப்பவர் அறவே இல்லையென்பதுமில்லை. ஆனால், ஒரு சிலர்—சிலரினும் சற்சிலர் அவ்விதமிருக்கக்கூடு மென்பதையும் ஒப்புக்கொள்ளுகிறோம். பெரும்பான்மையினரைப்பற்றியே இங்குப் பேசுவதாகுமென்பதும் அறிஞர் அறியத்தக்கது.

ஹையர் கிரேடு ஆசிரியர்களையே நியமித்து, அநுபவத்தில் பரீட்சை பார்க்க விருப்பமிருப்பின், மேலே கூறியவாறு லோயர் கிரேடு ஆசிரியர்களை உடனே நிறுத்திவிடாமல், லோயர் கிரேடில் பயிலக்கூடியவர்களை நிறுத்திவிட்டு அததொகைக்குச் சரியான ஹையர் கிரேடில் பயிலக்கூடியவர்களை அதிகப்படுத்தி பரீட்சை பார்ப்பதே ஒருவிதத்தில் உசிதமாகும்.

மேலும், மேற்குறிப்பிட்ட ஆசிரியரவர்களது அரிய வுரைகளில் கீழ்க் குறிப்பிடுபவைகளையும் இது சம்பந்தமான அதிகாரிகள் கவனித்தல் சிறப்புடையதாகும் :—

1. எதிர்காலத்தில், கிராமப்பாடசாலைகளில் வேலையில் புகவிருக்கும் லோயர் கிரேட் ஆசிரியர்கட்கு விசேஷ ஊக்கம் பிறக்கும்படியான ஏற்பாடுகளை அமைக்க அதிகாரிகள் முற்படின், கிராம மாணவரின் கல்வித்திறமையும் அபிவிருத்தியும் ஓங்குமென ஏன் நம்பக்கூடாது?

2. ஏற்கனவே, கிராமக்கல்வியில் ஈடுபட்டிருக்கின்ற லோயர் கிரேட் பயின்ற ஆசிரியர் எதிர்காலத்தில் எவ்வாறு மதிக்கப்பெறுவர்?

3. தங்கள் படிப்பை அதிகரித்து அந்தஸ்தை உயர்த்திக்கொள்ளுமாறு ஏதாவது சந்தர்ப்பம் கிடைக்கப்பெறுவரோ?

4. உபாத்திமைத் தொழில் அநுபவம் வாய்ந்தவருக்கு விசேஷ சலுகை காட்டப்படுமா?

5. லோயர் கிரேட் ஆசிரியராயினும், அவர்களது வேலைத்திறன் செம்மையாய் இருக்கும் பக்ஷத்தில் அத்திறமைக்குச் சன்மானம் செய்தல் இழுக்காகுமோ?

## கலியிற் கூலி கைமேலே.

உனது பெண் அவளுடைய மாமியை அலட்சியமாகப் பேசவும், கணவனைக் கைக்குள் போட்டுக்கொண்டு, கஜானா சாவியைக் கையில் வைத்துக்கொள்ளவும் நீ அவளுக்கு வேண்டிய நற்போதனைகளைச் செய்து மாமி வீட்டிற் கனுப்புகின்றனையே! உனது சம்பந்தியும் நாளைக்கு உனக்குவரும் மகளுக்கு அவ்வித மந்திரோபதேசமே செய்து அனுப்புவள்—வந்த பெண் உன்னை வாய்க்கு வந்தபடி பேச—உன மகன்—மனைவியின் வார்த்தைகளே வேதமெனக்கொண்டு மௌனஞ் சாதிக்க நீ யடையும் சங்கடங்களையும், உன் கதியையும் சற்று முன்னாகவே யோசித்துக் கொண்டாயா? பிரபஞ்சத்தில் எல்லாவற்றிலும் பதிலுக்கு பதில் எங்குமே யுண்டு. கலிகாலத்தில் கூலி கைமேலேயே கிடைத்து விடும்.

ஸ்ரீ






## 5. ஸ்ரீ குலசேகராழ்வார்.

(ம. இராஜகோபாலன், தமிழ்ப்பிரமாணி.)

இவர் அரசராயிருந்து, தெய்வபக்தியில் மேம்பட்டு, அரச போகத்தை வெறுத்து, பகவானை யடைந்தவராதலின், இவருடைய சரித்திரத்தை நாம் வாயாரப்படிப்பதும், மனதாரச் சிந்திப்பதும், செவியாரக் கேட்பதும் நமக்கு நன்மையேயாம் என்பதிற் சந்தேகமில்லை.

கோலி என்னும் பெயரைக் கொண்ட ஊர் ஒன்றுண்டு. அது நமது புண்ணிய பூமியாகிய பரதகண்டத்தில், எல்லா வளங்களிலும் சிறந்திருந்ததென்று சகலநூல் முதலான நூல்களில் புகழப்பெற்றிருக்கின்றது.

இதை முன்னொரு காலத்தில் திடவிரத பூராஜதேவன் என்னும் வேந்தர் பிரானொருவன் அரசுபுரிந்து வந்தான. இம்மன்னன் சத்தியவந்தன்; குடிகளைத் தன்னுயிர் போற்கருதி பரிபாலித்து வரும் சீல குணமுடையவன்; தெய்வபக்தியிற் சிறப்புற்றவன்; கல்வி கேள்விகளில் நிபுணத்துவம் படைத்தவன. இப்படி நற்குணங்களிலும், நற்செயல்களிலும் ஒப்புயாவற்று விளங்கிவந்த இம்மன்னா மன்னனைத் தங்களுயிர் போலெண்ணிக் குடிமக்கள் இவனிட்ட விதிவிலக்குகளுக்கு அன்புடன உட்பட்டு நடந்து வந்தார்கள்.

இவ்வரசனுக்கு எல்லா பாக்கியங்களும் கைகூடியிருந்தும் புத்திர பாக்கியம் ஒன்றுமட்டும் கைகூடாதிருந்தது. இது அவனுக்குப் பெருத்த மனவேதனையாக விருந்தது. அவன் இது விஷயமாகத் தன் சமஸ்தான பண்டிதர்களிடம் முறையிட்டுக் கொண்டான். அவர்கள் புத்திர காமேஷ்டி யாகத்தைச் செய்யும்படி அவனை வசரித்தார்கள். அவ்வாறே அப்பூபதி சந்தோஷ சித்தத்துடன் சற்குண சம்பன்னராய் விளங்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களை முன்னிட்டுக் கொண்டு, பகவானுடைய சந்நிதானத்தில் அந்த யாகத்தைக் குறைவின்றிச் செய்து முடித்தான். பகவானுடைய திருவருளால் இவ்வரசனுடைய தரும பத்தினியாகிய நாத நாயகியம்மாள் கருப்பவதியாய் பத்துமாதமும பூர்த்தியானதும், சேரகுலத்துக்கோர் தீபம் போன்று, எம்பெருமானது ஸ்ரீ கௌஸ்துப மாணிக்கத்தின் அம்சமாய், கலியாப்தம் இருபத்தெட்டில், பராபவவரு, மாசி மீ, சுக்கிலபக்ஷம், புனர்பூசம், துவாதசி கூடிய குருவார சுபதினத்தில இராஜ லக்ஷணங்கள் பொருந்திய ஒரு குழந்தையைப்பெற்றெடுத்தாள்.

திவ்வியமான தேஜசுடன் தனக்கோர் குழந்தை பிறந்தமைக்காக அரசன் பெரிதும் மகிழ்வடைந்து, நகரமுற்றும் அலங்கரித்து கோதானம், பூதானம், அன்னதானம், சொர்ணதானம் முதலிய தானங்களை வழங்கி, தெய்வஸ்தானங்களில் பற்பல திருவிழாக்களைக் கொண்டாடினான்; குழந்தைக்கு ஜாதகங்கணித்து, பன்னிரண்டாவது நாளில் சுற்றத்தார் தொடக்கமான மற்றவருஞ் சூழக் குழந்தையை "மாணிக்கங்கட்டி வைரமிடைகட்டி ஆணிப்பொன்னாற் செய்த வண்ணச்சிறு" தொட்டிலில் கிடத்தி, மட்டற்ற

வைபவத்துடன் மங்களம் பாடி தக்கவர்களைக்கொண்டு குலசேகரன் என்று அதற்குத் திருநாமஞ் சாற்றி, நாளடைவில் சௌளம் அன்னப் பிராசனம் (சோறூட்டல்) முதலிய கிரியைகளை நடத்தி, உபநயனஞ் செய்து குருமுகமாக வித்யாரம்பமும் செய்வித்தான்.

குலசேகரர், எம்பெருமானால் மயர்வற மதிநலம் அருளப் பெற்றவராகலின், சில தினங்களுக்குள்ளாகவே வேத வேதாந்தாதிகளை யெல்லாம், சமுத்திர ஜலத்தை ஆவிரூபமாகக் கிரகிக்கின்ற சூரியனைப்போல, ஞான ரூபத்தாற் கிரகித்துப் பக்திநெறியைக் கடைப்பிடித்த மேதாவியானார். இதனை வேந்தன்கண்டு அகமகிழ்ந்து, யுக்தவயதில் இவருக்குத் திருக்கலியாணமும், இராஜ்யாபிஷேகமும் செய்வித்தான். பின்னர் இவர் பிரஜாபரிபாலனஞ் செய்யு முறையையுஞ் சிலநாள் இவருடனிருந்து பார்த்து மனம் பூரித்து, அரசன் பத்தினி சகிதமாய், சத்கதியடையத் தவக்கோலம் பூண்டு நாட்டை விட்டுக் காட்டை யடைந்தான்.

தந்தையுந் தாயும் கானகஞ் சென்றதும், கல்விக்கு இருப்பிடமும், செல்வத்திற்கு உதிப்பிடமும், சற்குணத்திற்குச் சுரப்பிடமும் ஆன இவர், தமது தந்தையினும் குடிகளிடத்தில் பேரன்புடையவராய், நீதி வழுவாது நின்று செங்கோ லோச்சிவந்தார். ஒருநாள் உபயவிபூதி நாயகனான திருவேங்கடத்தெம்பெருமான், இவருடைய ஸ்வப்பனத்தில் எழுந்தருளித் தனது நிர்ஹேதுக பரம கிருபையாலே சேவைசாதித்து, இவரைப்பரம சாத்வீகராம் படிக்கடாக்ஷித்து, தனது சொரூப ரூபகுண விபூதிகளை யெல்லாம் காட்டியருளி மறைந்தனன். உடனே இவர் திடுக்கிட்டு நித்திரை குலைந்தெழுந்து, படுக்கையில் வீற்றிருந்தபடியே அநுபவரீதியிலுண்டாகிய அதிசயத்தால் அடங்காத அன்புகொண்டு, பகவானுடைய சௌலப்பியத்தையும், சேதனன் அவனை அடையப்பெறாத இருதயக் கடினத்தையும், தமக்குத் தற்காலம் கிடைத்த அவனுடைய சேவையிலுண்டான ஆனந்தத்தையும், இதற்கு முன் இராஜ்யாதி பாரத்தாலநுபவிக்க நேர்ந்த துக்கத்தையும் ஒன்றோடொன்றொப்பிட்டுப் பார்த்து, தம்மால் பகவானுக்குச் செய்யப்பட்ட தொன்றும் இல்லையாக விருந்தும், அவனே இப்படி நிர்ஹேதுகமாக அருள் செய்திருப்பதற்குக் கைம்மாறு யாது செய்யக் கடவோ மென்றெண்ணித் தளர்வடைந்து எழுந்து உலாவும்போது ஒன்றுந் தோன்றாதவராய், சிலாவிக்கிரகம் போல் அசையாதிருந்து விட்டார்.

அதிகாலையில், இவரைப் படுக்கையினின்றும் எழுப்புகிறவர்கள் வந்து வீணை முதலிய இசைக் கருவிகளை நெடுநேரம் மிழற்றியும், இவர் அசையாதிருப்பதுகண்டு, பயந்து, அமைச்சர்களிடம் ஓடி இதனையறிவிக்க, அவர்களும் வந்து சில சைகைகள் செய்து பார்த்து இவரிடமிருந்து பதிலொன்றும் பெறாதவராய், இவருக்கு அந்தரங்கத் தொண்டர்களைப் படுக்கையறைக்குள்ளே யனுப்பிப்பார்த்து வரச்சொல்ல, அவர்கள் சென்று இவர் அசையாது நிற்கும் திருக்கோலத்தைக் கண்ணுற்றுச் சேவித்து வெளியே வந்து 'அரசர் ஏதோ யோசனையில் மூழ்கி யிருக்கிறார்' என்றுரைத்தனர்.

அமைச்சர் முதலியோர் இவர் விஷயமாகத் தத்தமக்குத் தோன்றியவற்றைச் சொல்லிக் கொண்டிருக்கும் சந்தடியால் குலசேகரர் தெளிந்தெழுந்து வெளியே வந்து ஒருவரோடும் பேசாமல், பகவத் பக்தியிற் சிறந்துள்ள முதல் மந்திரியை அழைத்து ''அன்ப அநித்தியத்தை நித்தியமென்றெண்ணி வாழ்நாளை வீழ்நாளாகக் கழித்து வந்த என்னையும் ஒரு பொருளாக மதித்து, பகவான் சேவை தந்தருளினன்; மெய்யறிவை யூட்டினன்; ஆதலால் இனி 'கம்பமதயானைக் கழுத்தகத்தின் மேலிருந்து, இன்பமருஞ் செல்வ

மும் இவ்வரசும் யான் வேண்டேன்'; பாகவதோத்தமர்களான ஸ்ரீ வைஷ்ணவர்களைத் தேடிக்கொடு வந்து, அவர்களிடம் சத்காலக்ஷேபம் கேட்கவேண்டும்'' என்றுரைத்து அவ்வாறே செய்தும், மழிசைப் பிரானும், குருகைப்பிரானும் அருளிய பிரபந்தங்களைச் சேவித்தும், ஒட்டிலொட்டாத புளியம் பழம் போலும், சேற்றிலொட்டாத பின்ளைப் பூச்சிபோலும், தாமரையிலையிலொட்டாத நீர்த்திவலைபோலும், இராஜ்ய காரியங்களில் பற்றியும் பற்றுதவராயிருந்து வந்தார். பிறகு திருமலைக்குச் சென்று ஆங்குள்ள திருவேங்கடத்தெந்தையை அடிதொழுது, "ஊனேறு செல்வத்துடற் பிறவியான் வேண்டேன்.........கோனேரி வாழுங் குருகாய்ப் பிறப்பேனே", "திருவேங்கடச் சுனையில்...மீனாய்ப் பிறக்கும் விதியுடையேனாவேனே", "...எம் பெருமான் பொன்மலைமேல் ஏதேனு மாவேனே", "...படியாய்க் கிடந்துன் பவள வாய் காண்பேனே" என்று விண்ணப்பித்து அப்பெருமானுடைய அனுக்கிரகம் பெற்று அங்கிருந்து வட நாட்டுத் திவ்யதேசங்களுக்குப் போய் அங்கங்குள்ள பகவத் மூர்த்தங்களைச் சேவித்து, நேரே தமது இராஜ்யத்தை யடைந்தார்.

இராஜ்ய காரியங்களில் நிராசைகொண்டு, பகவத் காலக்ஷேபத்திலீடுபட்டு ஸ்ரீரங்கமகாத்மியத்தைக் கேட்டருளி அத்யந்தப் பிரீதி பரவசராய், "அணியரங்கன் திரு முற்றத்தடியார்" களான ஸ்ரீவைஷ்ணவசாது கோஷ்டியின் இன்பமிகு பெருங்குழுவு கண்டியானும் இசைந்துடனே யென்று கொலோ இருக்கும் நாளே" என்று பாசுரமிட்டுக் கொண்டிருக்கையில் ஸ்ரீ ரங்கநாதன் இவர் கருத்தை முற்றுவிக்க அனந்தகருட விஷ்வக்சேனாதி நித்திய சூரிகளைக் கடாக்ஷித்து "நீங்கள் மனித வுருவுடன் சென்று ஆழ்வாருக்குச் சேவைதந்து வாருங்களென்றனன்; அவர்களும் அந்தணராய் ஸ்ரீ வைஷ்ணவ ரூபங்கொண்டு இவரிருக்கும் இடத்தே வந்து சேவை தந்தனர்; ஆழ்வாரும் அவர்களைக் கண்டதும் எதிர் சென்றுபசரித்து அழைத்துவந்து, அவர்களுடைய திருவடிகளில் தமது முடிசேர வீழ்ந்து, தண்டன் சமர்ப்பித்து, அவர்களால் மங்களாசாஸனம் செய்யப்பெற்று அவர்களைக் கூடத்திற் கெழுந்தருளப்பண்ணி, ஆசனத்திருத்தி ஸ்வரூபானுரூபமாக ஆராதித்து, சத்கால க்ஷேபங்களைக் கேட்டு ஆனந்தங் கொண்டார். அப்போது "ஸ்ரீரங்க யாத்திரை செய்வதும், அதில் இச்சை கொள்வதுமே தீரா நரகைத்தீர்த்து வைகுந்த வாழ்வைத் தருமென்னில் அந்த ஸ்தலத்தில் வாசஞ் செய்வோர்களுடைய பிராப்தியை என்னென்று விவரிக்கலாகும்" எனவரும் வாசகத்தைக் கேட்டு உடனே ஆழ்வார் ஸ்ரீரங்கயாத்திரையில் மனதைச்செலுத்தி கோஷ்டிகளுக்குத் தெண்டனிட்டு "அடியேன் ஸ்ரீரங்கத்திற்கு இப்போதே செல்ல வேண்டும்; விடை கொடுத்தருள்வீர்" என்று பிரார்த்தித்தார். அதற்கு அவர்கள் "அறுபதினாயிர வருஷம் பெருமாளை யாராதித்து வந்த வொருவனடைகிற பலனைப் பார்க்கிலும் அவனடியார்களி லொருவரை யொரு வேளையிலாராதித் தவனடையும் பலன் பெருத்த" தென்றனர். அங்ஙனமே யாகுக! பிரயாணத்தை மறுநாள் வைத்துக் கொள்வோம் என்றனர் ஆழ்வார். மறுநாளும் இவர் பயணம் தடைபடும்படி பகவத்சங்கல்பத்தால் இவர் எதிர் பாராத அடியவர் பெருங் கூட்டமொன்று இவரிடம் வர, அவர்களை யுபசரிப்பதில் இவர் கவனஞ் செலுத்தலானார். இவ்வாறே இவருடைய பயணம் பல நாள் நிறைவேறாம லிருந்தது. ஆயினும் அரசன் ஸ்ரீரங்கயாத்திரை செய்யப் போகிறா ரென்கிற கோஷம் மாத்திரம் ஊரெங்கும் பரவியிருந்தது.

இப்படி யிவர் யாத்திராபேட்சையுடன் பாகவத ததியாராதனையிலீடுபட்டுக்கொண்டும், இதிகாசசிரேஷ்டமான ஸ்ரீ ராமாயண காலக்ஷேபத்தை நடத்திக் கொண்டும் வரலானார். ஒருநாள், காலக்ஷேபத்தில், "பெருமாள்,

இளையபெருமாளைப் பிராட்டிக்குக் காவலாக வைத்து விட்டுத் தாமொருவராகவே கரதூஷண திரிசிராதி பதினாலாயிரம் துஷ்டராக்ஷஸாக ளெதிரில் யுத்தத்திற்குப் புறப்பட்டாரே; தனியே சென்ற பெருமாளுக்கு அத்தீயோரால் என்ன கெடுதி நேரிடுமோ என்று ஸ்ரீ வால்மீகி பகவான் கலங்குகிறார்'' என்னும் விஷயத்தைப் புராணிகர் உபந்யசிக்கக் கேட்டதும் வேறெதிலும் சிந்தை செலுத்தாமல் காலக்ஷேபத்தையே சிரத்தையாய்க் கவனித்துக் கொண்டிருந்த ஸ்ரீ குலசேகரர் "அப்படியா? பெருமாளுக்குத் துணையாவார் ஒருவருமிலரா? நல்லது நாமே துணையாவோம்'' என்று சொல்லி உடனே யுத்த கோலத்துடன் புறப்பட்டுச் செல்லுவாராயினர். இதைக் கண்ட அமைச்சர் முதலானோர் "நமது அரசருக்கு சித்தப் பிரமை ஏற்பட்டுவிட்டது போலும்! எப்போதோ நடந்த யுத்தத்திற்கு இவர் இப்போது துணைசெய்யப் போகின்றாராம்! இதென்ன பைத்தியம்!'' என்று பேசிக்கொண்டு, "நாமிதைத் தடுக்கும் உபாயம் யாது?'' என்று சிந்தித்து, சிலரை யேவி, இவரெதிரில் வரவிட்டு "பெருமான் ஒருவராகவே நின்று அந்த ராக்ஷஸப் படையை நிர்மூலமாக்கித் திரும்பிவிட்டார்'' என்று இவருக்குத் தெரிவிக்கச் செய்தனர். அவர்களும் அவ்வண்ணமே செய்ய, ஆழ்வார் சந்துஷ்டராய் ராஜஸ்தானத்துக் கெழுந்தருளினர்.

மற்றொரு நாள், இவருக்குக் காலக்ஷேபம் சாதித்து வரும் புராணிகர் ஏதோ அசந்தர்ப்பத்தினால் தமது புத்திரரை காலக்ஷேபஞ் சாதிக்க இவரிடம் அனுப்பினர் அப்புத்திரர் இவருடைய திருவுள்ள நெகிழ்ச்சி யிருக்கும் படியை யறியாதவராய், கொஞ்சம் படபடப்புடன் "ஆ! ஆ!! அந்தக் கொடிய இராவணன், மாரீசனால் பெருமாளையும் இளைய பெருமாளையும் அப்புறப் படுத்தி, பிராட்டியை அபகரித்துக் கொண்டு போயினானே! இதென்ன அநியாயம்'' என்று வால்மீகி பகவான் மனவேதனை யடைந்தார்'' என்று உபந்யசித்தார். இவ்வசனங்களைச் செவியேற்ற ஆழ்வார் "அந்த வஞ்சகனான இராவணன் பிராட்டியைக் கவர்ந்து சென்றானோ? நான் இக்கணமே இலங்கைக் கேகி, இராவணனுடைய தலைகளைத் துணித்துப் பிராட்டியை மீட்டுக் கொண்டுவந்து, முன்னிருந்த இடத்தில் சேர்ப்பிக்கிறேன்'' என்று சொல்லி அந்த நிமிஷமே தமது ஆசனத்தினின்றும் எழுந்து, உருவிய வாளுங்கையுமாய் ஓர் புரவியின் மீது ஆரோகணித்துக் கொண்டு, சேனைகளை விரைவாகத் தம்மைப் பின்தொடர ஆக்யாபித்து, இலங்காபுரியை நோக்கி அதிவேகமாய்ச் சென்று சமுத்திரத்திலுந் துணிந்து இறங்கி விட்டார்.

இவரது அபரிமிதமான பக்தியின் மேன்மையைக் கண்டு பகவான் இவருக்கும் இவர் சேனைகளுக்கும் சமுத்திர ஜலத்தை முழந்தாளளவு படுத்தி தான் சீதா லக்ஷ்மண சமேதராய், ஸ்ரீ விபீஷ்ணாழ்வான் மகாராஜா தொடக்கமான சைனியங்களுடன் புஷ்பக விமானத்தில் ஏறியருளி யெதிரே வந்து சேவை சாதித்து "ஆழ்வீர்! நாமந்த இராவணனை அவன் குலத்தோடு மழித்து வெற்றிகொண்டு வந்திருக்கிறோம். நீர் கொண்ட கவலையை ஒழித்து விடும்'' என்றனன். ஆழ்வாரும் அவர்களனைவரையும் தமது திருமாளிகைக்கு அழைத்துக் கொண்டுபோய் மூன்றுநாள் பரியந்தம் வைத்திருந்து ஆராதித்து வந்தனர். பெருமான் "ஆழ்வாரே! நாம் இன்னமும் இங்கு தாமதித்துக் கொண்டிருந்தால், பாதாழ்வான் கதியாதாமோ? விடைதர வேண்டும்'' என்று விடைபெற்றுக் கொண்டு, அயோத்தியை நோக்கிச் செல்பவர் போலபிநயித்து அந்தர்த்தான மாயினர்.

இப்பிரிவாற்றாமை ஸ்ரீ குலசேகரரை மூர்ச்சையு றழுத்திவிட்டது. முதன் மந்திரி தக்க உபசாரத்தால் அம்மூர்ச்சிப்பி னின்றும் இவரைத்

தெளிவிக்க, இவரும் தெளிந்தெழுந்து வேதோபப்ராம்ஹணசாரமாய் மணி மந்திர அவிழ்தங்களை விவரிக்கும் ஸ்ரீ முகுந்தமாலை என்னும் ஸ்ரீசூக்தியைப் பாடியருளி அன்று தொட்டு பிரபஞ்ச வாழ்வை வெறுத்து, பகவத் விஷயத்தில் ஈடுபட்டு, சக்ரவர்த்தி திருமகனையே திருவாராதனமாக எழுந்தருளப் பண்ணிக்கொண்டு ஸ்ரீமத்ராமாயண காலக்ஷேபத்தைப் பூர்த்தி செய்து, ஸ்ரீராம நவமியில் பெருமானை யுத்ஸவங் கண்டருளப் பண்ணினார்.

அமைச்சர்கள் "ஏது ஸ்ரீ வைஷ்ண சகவாசத்தால் நமது அரசருக்கு இந்தப் பைத்தியம் பெரிதாய்விட்டது, இதை மாற்றவேண்டும்" என்றெண்ணி இத்துப் பெருமானுடைய பெட்டியி லிருந்ததோர் நவரத்ன சோபிதமான ஹாரத்தை யெடுத்து மறைத்து வைத்து, இவருக் கந்தரங்கவத்தேசியரான ஸ்ரீ வைஷ்ணவர்களே அவ்வாபரணத்தை யபகரித்தனர் என்று இவருக் கறிவித்தனர். இவரதை யங்கீகரியாது, உழையர் மூலமாக விஷமுடைய சில சர்ப்பங்களைப் பிடித்து, ஒரு பெருங் குடத்திலடைத்துக் கொண்டு வரச் செய்து, ஸ்ரீ வைஷ்ணவ நிந்தை கூறுவோரைக் கூப்பிட்டு "நீங்கள் பேசுவது உண்மையானால் இக்குடத்திற் கையிட்டுப் பிரமாண பூர்வமாகச் சொல்லுங்கள். அப்போதுங்கள் பேச்சை நம்புவேன்" என்றார். ஒருவரும் அதற்கு உடன்படவில்லை. பிறகு ஆழ்வார் தாமே அக்குடத்தில் தமது கையை விட்டு அதனுள்ளுள்ள சர்ப்பங்களின் தலை மீதறைந்து, "களவுபோன ஹாரத்தை ஸ்ரீ வைஷ்ணவர்க ளெடுக்கவில்லை" என்று சபதஞ்செய்தார். அச்சமயம் அந்த சர்ப்பங்களி லொன்று ஆழ்வாருடைய புஜவழியாக மேலேறிப் படம் விரித்து, அவரது திருமுடிமேற் குடையாகக் கவிந்து நின்றது. மற்றொன்று பழிகூறினவர்களைச் சீறித் துரத்தின்று. அவர்கள் பயந்து ஆபரணத்தைக் கொண்டு வந்து ஆழ்வார் முன் சமர்ப்பித்தனர்.

பின்னொருநாள் ஆழ்வார் பகவத் ஸ்வரூப ரூபகுணாதிசயங்களில் ஈடுபட்டுத் தம்மை மறந்திருக்க, ஓடி வந்து அவரை நோக்கித் "தேவரீருடைய திருக்குமாரன் குளிக்கப்போய், குளத்தில் மூழ்கிவிட்டனனே" என்று கூக்குரலிட, இவர் "புத்திரன் என்னைக் கைவிட்டாலென்ன? ஒன்றும் நஷ்டமாக வில்லை, பகவான் கைவிடலன்றோ நமக்கென்று மொழிபாத தொல்லை" எனக்கூறிப் பிறகு கண்விழித்துப் பார்க்க, தமது அருமைக் குமரன் தம் எதிரே உலாவக்கண்டு, உலகபோகத்தை வெறுத்து, இந்த இருள் தருமா ஞாலத்தின் தன்மை கொடிது! கொடிது!! மகாகொடிது!!! "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா வொழுக்கும் அழுக்குடம்பும், இந்நின்ற நீர்மை யினியாமுறாமை" யேநல்ல தென்று தம்முள் நிச்சயித்து, உடனே தமது புத்திரனுக்கு முடிசூட்டிவிட்டு, திருவரங்கம், திருக்கண்ணபுரம், தில்லைத் திருச்சித்ரகூடம் இந்த திவ்யக்ஷேத்திரங்களுக்குச் சென்று ஆங்காங்குள்ள எம்பெருமான்களைச் சேவித்து, திருவருள் பெற்று முடிவில் வீரநாராயணபுரம் அடைந்து மன்னனாரைத் திருவடி தொழுது, தமது அறுபத்தேழாவது திருநட்சத்திரத்தில் திருநாட்டுக் கெழுந்தருளி "அந்தமில் பேரின் பத்தடியாரோடு" வாழ்ந்திருந்து நிலவுலகத்தை யுய்வித் தருளினார்

இவ்வாழ்வாருடைய திருநாமத்தை நாம் உச்சரித்திருப்பதினாலேயே நன்மை யடையலாம் என்பதைப் பின்வரும் பாடலால் நன்குணரலாம்.

"இன்னமுதம் ஊட்டுகேன் இங்கேவா பைங்கிளியே
தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமான்—பொன்னஞ்
சிலைசேர் நுதலியர்வேள் சேரலர்கோன் எங்கள்
குலசே கரனென்றே கூறு"

சுபம்! சுபம்!!

# தீர்க்க சுமங்கலீ பவா!

(பண்டிதர். L. இராமசாமி நாயுடு.)

சுந்தரேச சாஸ்திரிகளிடம் சென்றால் எந்த நேரத்திலும் வட்டிக்குப் பணம் வாங்கலாம் என்ற விஷயம் அக்கிரஹாரம் (ஒரு கிராமம்) மாத்திரமல்ல சுற்றுப் பக்க கிராமங்களுக்கெல்லாம் தெரியும். அந்தப் பக்கங்களில் ஐந்தாறு வருஷ காலமாகச் சரியான மழையில்லை. கால் நடைகள் தீனியில்லாமல் வாடி வதங்கின. பலமடிந்தன. விவசாய வரவு கிடையாது. இந்தப் பக்கத்து ஜனங்களுக்கு வேறெங்கேனும் போய்ப் பிழைக்கவும் தெரியாது. கல்வியைப்பற்றியோ சொல்ல வேண்டியதில்லை! மூட ஆடம்பரங்கள் பஞ்சத்தால் மூலையில் ஒதுங்கின. ஜனத்தொகை மட்டும் எப்படியோ பெருகிக்கொண்டுதானிருந்தது. அக்கிரஹாரத்தில் மட்டும் கணக்கிட்டால் பெண்கள் இருமடங்கு ஆண்கள் ஒருமடங்கு முன்னிருந்ததைவிட அதிகமாயிருந்தார்கள். பணத்தேவை அதிகரித்துக்கொண்டிருந்தது. வட்டி ஒன்றுக்கிரண்டானாலும் இந்தச் சமயத்தில் சுந்தரேச சாஸ்திரிகளைக் கருணாகரன் என்றுதான் சொல்லவேண்டும். சாஸ்திரிகள் மஹா ஜாக்கிரதையான புருஷர். புள்ளி விதானம் தெரியாமல் ஒரு தம்பிடி கூட வெளிவிடமாட்டார். ஐம்பது ரூபா கடன் கொடுப்பதாயிருந்தால் வில்லங்கமில்லாத ஆயிரம் பெறுமான சொத்தை அடமானம் வைத்துக்கொண்டுதான் கொடுப்பார். வட்டிக்கணக்கில் தீரர். இம்மி கூட யாருக்கும் விட்டுக் கொடுக்க மாட்டார். எப்படி இருந்தால் என்ன? பணம் படைத்தவர் காலமாயிருக்கிறது. ஏழைக்குடிகளும் இவர்களை அண்டித்தானே பிழைக்கவேண்டியிருக்கிறது. அக்கிரஹாரத்தில் அநேகமாக எல்லாருடைய பூமியும் நமது சுந்தரேச சாஸ்திரிகள் கையில் சிக்கியிருந்தது. ஆகையால் ஊர் விவகாரங்கள் முழுவதும் இவர் முன்னிலையில் வந்து அடிபடும். இவருடைய தீர்ப்புக்கு அப்பீல் இல்லை. யாருக்கும் மீறிப்போகும் சக்தியுமில்லை. பரமவைதீகர். சுற்று வட்டகையிலுள்ள கிராமவாசிகளுக்கு இவர் குருஸ்தானமும் வகித்திருந்தார். எந்தச் சந்தர்ப்பத்திலும் ஆசார அநுஷ்டானங்களில் அணுவளவும் பிசகமாட்டார். தினந்தோறும் பிராதக்கால ஸ்நானம் செய்து உடம்பை வெண்ணீறு மயமாக்கிக்கொள்ளுவார். அவர் அணிந்த உருத்திராக்ஷ மாலைகளும் ஜெபமணிமாலைகளும் பார்ப்போருக்குப் பாரமாகத் தோன்றும். ஸ்தூலசரீரம் படைத்தவர். அவருடைய பருத்த முகமும், செங்காவிக் கண்களும், தொந்திவயிறும், தளர்ந்த உடம்பும் காண்போருக்கு ஒருவித பயத்தை உண்டாக்கும். அவர் தமது வீட்டுத் தெருத்திண்ணையில் உட்கார்ந்திருப்பது தெரிந்தால் ஆண் பெண் குழந்தை குட்டிகள் யாரும் அவ்வழியில் நடக்க அஞ்சுவார்கள். இவருக்கு பத்மநாபசாஸ்திரியார் தான் முதன் மந்திரி. இவர் ஒரு சமயசஞ்சீவி. நமது சுந்தரேச சாஸ்திரிகளின் அடிச்சுவட்டைப் பின்பற்றுதலையே கௌரவமாகவும் லக்ஷியமாகவுங் கொண்டவர். அந்த ஊரில் இவருக்குத் தெரியாத சங்கதி ஒன்றுமிராது. யாரிடத்திலும் சிரித்துப் பேசுவார். விஷயங்களை மற்றவர்களிடம் அநுதாபங்காட்டி வினயமாகக் கிரஹித்துக்கொண்டு சாஸ்திரிகளிடம் ஒன்றுக்குப் பத்தாகப் பெருக்கிக் கோள் மூட்டுவதில் பலே நிபுணர். இவரைக் காட்டிலும் சுந்தரேச சாஸ்திரிகள் ஒருவிதத்தில் நல்லவர் என்று கூட ஜனங்கள் சொல்லிக் கொள்ளுவார்

*

கள். எடுத்ததற்கெல்லாம் ஜாதிப் பிரஷ்டம்! நினைத்ததற்கெல்லாம் அபராதம்! நியாய அநியாய விசாரணைக்கும் சுந்தரேச சாஸ்திரிகளின் தீர்ப்புக்கும் சம்பந்தமில்லை. ஆனால் ஊரில் பத்மநாப சாஸ்திரியாரால் நேரும் வினைகள் தான் அதிகமாயிருக்கும். எப்படியோ சுந்தரேச சாஸ்திரிகளின் நம்பிக்கையைப் பெற்றுவிட்டார். மரியாதையான குடும்பஸ்தர். வேறு வேலையில்லை. ஊர்வம்பு அளப்பதே பொழுதுபோக்காக உள்ளவர். ஊர்நடுவில் அரசும் வேம்பும் சேர்ந்து வளர்ந்திருக்கும் இடத்தைச் சுற்றிலும் சௌகரியமான திண்ணை போடப்பட்டிருக்கிறது. மாலையில் சாஸ்திரிகளும் சாஸ்திரியாரும் உல்லாசமாக உட்காருவது வழக்கம். சில வயோதிகரும் சேர்ந்துகொள்ளுவார்கள். ஆங்கிலப் பயிற்சியால் ஆசாரஹீனம், கிராப்புத்தலைப் பழிப்பு, பூர்வாசாரப் பெருமை, புராணப் பெருமை, ஜாதிப்பெருமை, விதவாவிவாக கண்டனம், பாலியவிவாக மேன்மை, கிராமச் சச்சரவு விசாரணை, மாமி மருமகள் மனஸ்தாபம் முதலிய விஷயங்கள் இவர்கள் வாயில் படாதபாடுபடும்.



சாஸ்திரிகள் புத்திர பாக்கியம் வாய்ந்தவர். மூன்று ஆண்களும் ஐந்து பெண்களும் உண்டு. மூத்தகுமாரன் அந்தக் கிராம கர்ணம். இரண்டாவது மகன் வரவுசெலவையும் நிலங்களையும் பார்க்கும் வேலையில் இருந்தான். மனை இருப்பு இவனிடந்தான். தந்தை குணம் இவனிடந்தான் பிரதிபிம்பித்தது. பணத்தை இறுக்கிப் பிடிப்பதில் கைதேர்ந்தவன். சாஸ்திரிகளுக்கு இவனிடம் தான் மிகப்பிரியம். மூன்றாவது புத்திரன் பெயர் சங்கரன். இவன் மதுரையில் இண்டர்மீடியட் பரீக்ஷைக்குப் படித்துக்கொண்டிருந்தான். நன்மைக்கோ தீமைக்கோ மூன்றாவது தடவையும் பரீக்ஷையில் தவறிவிட்டான். தவறிய விஷயம் சுந்தரேசசாஸ்திரிகள் காதிற்பட்டதும் இடி இடித்ததுபோல் கூச்சலிட்டுக்கொண்டு தலை குனிந்து எதிரில் நின்றுகொண்டிருந்த சங்கரனைப் பலவாறு வைது அதட்டிக் கிழிகிழி என்று கிழித்தார். சப்தத்தைக் கேட்ட சாஸ்திரிகளின் மனைவி திரிபுரசுந்தரி அம்மாள் சமையல் அறையிலிருந்து ஓடிவந்தாள். சாஸ்திரிகளுக்கு எரிகிற நெருப்பில் எண்ணெய் ஊற்றின

மாதிரி இருந்தது. "கேட்டாயாடி உன் மகன் சமர்த்தை? இவன் இழவுக்கு மாதாமாதம் எவ்வளவு பணத்தைக் கொட்டி அழுகிறது! நீயோ உம் என்பதற்கு முன் பொர்சுக்குவந்து நீலி அழுகை அழுகிறாய்! நானும் என்ன செய்து தொலைக்கிறது என்று கப்பல் கட்டிக்கொண்டே இருக்கிறேன். அவனும் தவறிக்கொண்டே வருகிறான். அட ஈஸ்வரா! இப்படியா என் தலை எழுத்து இருக்கவேண்டும்? 1000 ரூபா நஷ்டம் என்றால் அதற்கு எத்தனை ரூபா வட்டி நஷ்டம் என்று தெரியுமா? தெரிந்திருந்தால் இப்படித் தவறுவனா? உன்னையும் அவனையும் சொல்லிப் பயனென்ன? எல்லாம் என் வேளை? சரி! சரி! போ! உன் அருமந்த மகனுக்கு இலை நிறையப் படைத்துத் தின்னச்செய்; எக்கேடு கெட்டால் நமக்கென்ன!" என்று சொல்லிக்கொண்டே அவர்களைப் பார்க்கச் சகியாதவராய் வீட்டைவிட்டு வெளியேறி மேற்சொன்ன மரத்தடித் திண்ணையிற்போய் உட்கார்ந்துகொண்டார். திரிபுரசுந்தரியம்மாள் இம்மாதிரி சந்தர்ப்பங்களில் வாயைத் திறந்துவிட்டாலோ உலக்கைப் பூசையைத்தவிர வேறு கிடைக்காது. சங்கரனுக்கு உண்டான துக்கத்துக்கு அளவே இல்லை. தேம்பித்தேம்பி அழ ஆரம்பித்தான். திரிபுரசுந்தரி அம்மாள் வேண்டிய சமாதானம் சொல்லி அவனைச் சாப்பிடச் செய்வதற்குள் வெகு சிரமப்பட்டுவிட்டாள். சாப்பிடும்போதே சங்கரனுக்கு ஒரு எண்ணம் உதித்தது. மிகவும் பணிவாகவும் சாதுரியமாகவும் தன் தாயாரிடம் அதைத் தெரிவிக்கத் தொடங்கினான். அவனுடைய மனம் அவன் சொல்லச்சொல்லக் கஷ்டப்பட்டது. கூடாதென அடியோடு மறுத்தாள். இவனும் விடவில்லை. பெருத்த யோசனையின் பின்னர் "சரி! உன் இஷ்டம்போல் செய்" என்று ஈனசுரத்தில் கண்ணீர் ததும்ப பதில் கொடுத்தாள். சாப்பாடு முடிந்தவுடன் சங்கரன் மிக்க பரபரப்புடன் அங்குமிங்கும் அலைந்துகொண் டிருந்தான்.

* * *

இரவு மணி எட்டரை. ரோட்டில் சங்கரன் கைப்பெட்டியைக் கீழே வைத்துக்கொண்டு "உஸ்......என் இன்னும் வரவில்லை?" என்று சொல்லிக் கொண்டிருந்தான். இரண்டொரு நிமிஷத்தில் மோட்டார் சப்தம் கேட்டது. சங்கரன் மகிழ்ந்தான். காரில் ஏறத் தயாராக நின்றான். மோட்டாரும் வந்தது; கை அமைத்து நிறுத்தினான். காரில் ஏறிக்கொண்டு நேரே மதுரைக்கு "டிக்கட்" வாங்கிக் கொண்டான்.

இரவு பத்துமணி வரை சாஸ்திரிகள் அந்தத் திண்ணையை விட்டு அசைந்தவரல்லர். கோபந்தணிந்த பாடுமில்லை. எல்லோரும் உறங்கினபின் வீட்டிற்கு வந்து ஒருவருடனும் பேசாது படுத்துக் கொண்டார். பொழுதும் விடிந்தது. சாஸ்திரிகளுக்கு ஏதோ அவசரத்தில் பெட்டியில் பணம் வைத்துப் பூட்டாமல் விட்டுவிட்ட ஞாபகம் வந்தது. உடனே சென்று பெட்டியைத் திறந்து பார்த்தார். விழுந்தது சாஸ்திரிகள் வீட்டில் இழவு! எண்ணூறு ரூபா கொண்ட நோட்டுப்பை காணவில்லை. சங்கரனும் வீட்டில் இல்லை. திரிபுரசுந்தரி அம்மாளைக் கேட்க "எனக்கொன்றும் தெரியா" தெனச் சாதித்தாள். சாஸ்திரிகளுக்கு இன்னதுதான் செய்வதென்று தோன்றவில்லை. தொந்தியைப் பிசைந்தார்! கையை நெரித்தார்! தலையில் அடித்துக்கொண்டார்! என்ன செய்வார் பாவம்! சமுத்திரத்திற் போட்ட பணமாகவே அவருக்குப் புலப்பட்டது. எவ்வளவு செலவானாலும் சங்கரனைக் கண்டு பிடிக்க வேண்டுமென்று தீர்மானித்தார். எங்கிருக்கிறான் சங்கரன்?

வாரம் ஒன்று கழிந்தது. சாஸ்திரிகள் வீட்டாளாகி விட்டார். ஊர்ப் பொதுத்திண்ணையும் காலியாகவே இருந்தது. வழக்குகளும் ஓய்வு எடுத்துக்

கொண்டன. ஆசார அநுஷ்டானம், ஊர்வம்பு, நியாயத் தீர்ப்புகள் குடிகொண்ட சாஸ்திரிகள் சிந்தையைப் பணக்கவலை ஆக்கிரமித்துக் கொண்டது. ஒருநாள் தபாற்சேவகன் காலை சுமார் பத்தரைமணிக்கு ஒரு கடிதங் கொண்டுவந்து கொடுத்தான். மூத்த குமாரர் கடிதத்தை வாங்கி சாஸ்திரிகள் கையிற் கொடுத்தார். சாஸ்திரிகளும் கயிறு கட்டிய பழையமூக்குக் கண்ணாடியை மாட்டிக் கொண்டு அவசரமாகப் பிரித்துப் பார்த்தார். சில வரிகளை வாசித்தாரோ இல்லையோ ஐயோ! என்று அலறிக் கொண்டு கீழே விழுந்தார். தலைகுக்கல்... என்று சொல்லிக் கொண்டே மூர்ச்சையடைந்தார். சமையல் அறையில் காய்கறிகளை அரிந்து கொண்டிருந்த திரிபுரசுந்தரி அம்மாள் ஓடிவந்து சாஸ்திரிகள் நிலைமையைக்கண்டு அழ ஆரம்பித்தாள். புத்திரிமார்களும் வந்து அழத்தொடங்கினர். அக்கம்பக்கத்தாரும் திரண்டனர். வீடெங்கும் அழுகுரலாகவே இருந்தது. ஆனால் காரணம் மாத்திரம் விளங்கவில்லை. மூத்த குமாரன்வந்து சாஸ்திரிகள் சமீபத்திற் கிடந்த கடிதத்தை எடுத்து வாசித்தான். அதில் அடியில் வருமாறு வரையப் பட்டிருந்தது.



கொழும்பு,
12—5—25.

மஹாரா-ஸ்ரீ-ஸ்ரீ அப்பா அவர்களுக்கு அநேக நமஸ்காரம். க்ஷேமம். நான் இதுவரை தங்களுக்குக் கொடுத்த கஷ்டத்திற்கு மன்னிக்க வேண்டுகிறேன். பரீக்ஷை தவறியதால் உண்டான வெட்கம் என்னை ஊரைவிட்டோடும்படிச் செய்தது. இரும்புப் பெட்டியில் இருந்த எண்ணூறு ரூபா

வையும் நான்தான் எடுத்துக்கொண்டு வந்துவிட்டேன். இங்கிலாந்து சென்று பாரிஸ்டர் பரீக்ஷை கொடுத்த பின்னர்தான் உங்களைத் தரிசிப்பேன். மதுரையில் பாரிஸ்டர் டி. வி. ராவிடம் எனது பாகத்தை ஒத்திவைத்துச் செலவுக்கு வேண்டிய பணம் பெற்றுக்கொண்டு இங்கு வந்திருக்கிறேன். இவ்விடமிருந்து நாளைக்காலை "லாரன்சோ" என்னும் கப்பலில் இங்கிலாந்துக்குப் புறப்படுவேன். அம்மா முதலிய எல்லோருக்கும் நமஸ்காரம்.

இங்ஙனம்
தங்கள் அன்புள்ள
சங்கரன்.

எல்லாரும் ஆவலோடு என்ன! என்ன!! என்று கேட்டனர். "என்னமோ சங்கரன் பயல் சீமைக்குப் போகிறானாம். இங்கே படித்துப்படித்துக் கிழித்து விட்டான். தறுதலைகள் தலை கிறுகிறுத்துத் திரியுதுகள்." என்று கோபத்தோடும் அலக்ஷியத்தோடும் சொன்னான் மூத்த குமாரன். இதைக் கேட்டவர்கள் "பணக்காரர் வீட்டு விஷயம் எப்படி வேண்டுமானாலும் இருக்கும். ஆசாரம் எப்படிப்போனால் என்ன? அது மற்றவர்களைத்தான் கழுத்தை நெரிக்கும்" என்று பற்பல விதமாகப் பேசிக்கொண்டு போனார்கள். சாஸ்திரிகளுக்கும் கொஞ்சம் பிரக்ஞை வந்தது. எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணினார். உடம்பு வியர்த்தது; மெய்ந்நடுங்கிற்று; பெண்சாதியைப் பார்த்துப் பார்த்துப் பல்லைக்கடித்தார். "அடி முண்டை! நீ கொடுத்த செல்லம் அல்லவா இப்படி வந்து முடிந்தது?" என்று வைதார். நான் என்ன செய்தேன்? உங்களால்தான் அவன் கதி இப்படி ஆயிற்று! பரீக்ஷை தவறினால் அடுத்த வருஷம் ஆகிறது; என்ன மூழ்கிப்போயிற்று? சங்கரன் ஓடுவதற்கு நீங்கள்தான் காரணம் என்று கண்ணீர்விட்டு அழுதாள். சாஸ்திரிகளுக்கு மகனைப்பற்றிய கவலை அதிகம் இல்லை, தான் இதுவரை செலுத்திவந்த அமுலுக்கு ஆபத்து வந்ததே; இனி ஊரார் முகத்தில் எப்படி விழிப்பது? என்ற ஏக்கமே பெரிதாயிருந்தது. வீட்டை எல்லாரும் பஹிஷ்கரித்து விட்டால் என்ன செய்வது? என்று கலங்கினார். எந்த நேரமும் வீட்டுக்குள்ளேயே அடங்கியிருந்தார். நாளுக்குநாள் தொந்தியுங் கரையத் தொடங்கிற்று.

* * *

பத்மநாப சாஸ்திரியாருக்கு ஒரே மகள். ஆண் சந்ததி இல்லை, விஜயாள் சிறு வயதிலிருந்தே படிப்பில் உற்சாகங் காட்டி வந்தாள். அருமையான குணங்களும் அழகும் பெற்றிருந்தாள். சமஸ்கிருதத்தில் பண்டிதை. நல்ல சங்கீத ஞானமும் உண்டு. பத்மநாப சாஸ்திரியார் 8000 ரூபா வரதக்ஷிணை கொடுத்துத் தம் புத்திரியைச் சப் இஞ்சினீயர் வேலைபார்த்துக்கொண்டிருந்த ஸ்ரீநிவாசன் B.A., B.E. என்ற வரனுக்குச் செலவுபோட்டு வெகு விமரிசையாகக் கலியாணஞ்செய்து கொடுத்து மூன்று வருஷங்களாயின. ஆவணி மாதத்தில் சாந்தி முகூர்த்தத்துக்கு வேண்டிய ஏற்பாடுகள் தடபுடலாக நடந்துகொண்டிருந்தன. அப்போது ஸ்ரீநிவாசன் திருச்சியில் ஸ்பெஷல் "டியூட்டியி"லிருந்தான். அது வெள்ளப்பெருக்கெடுத்த சமயம். எப்படியோ ஸ்ரீநிவாசன் வெள்ளத்தில் மூழ்கி இறந்தான். இத்தகையில் பத்மநாப சாஸ்திரியார் குடும்பம் துக்கசாகரத்தில் ஆழ்ந்திருந்தது. சாஸ்திரியார் விஷயம் எப்படி இருந்தாலும் பெண்ணின் நிலை பரிதாபகரமாயிருந்தது. மகளைப் பார்க்குந்தோறும் பத்மநாபசாஸ்திரியார் மனம் குபீர் குபீர் என்று பற்றி எரியும். இதுவரை ஏழைப்பிராமணர்களை அலக்ஷியஞ் செய்ததற்கு அவருக்கு இது ஒரு சோதனைக் காலமாகவே இருந்தது. விஜயாம்பாள் தலையை

மொட்டை அடித்துக்கொள்ளவில்லை. ஆடை, ஆபரணம், ரவிக்கை முத லானவற்றை எப்போதும்போலவே அணிந்துகொண்டிருந்தாள். நமது சாஸ் திரியார் வைதிகம் இவ்வாறிருக்க எப்படி இடங்கொடுத்தது! என்று வாசகர் கள் வியப்புடன் வினவலாம். "தலைவலியும் தரித்திரமும் தனக்கு வந்தா லன்றோ தெரியும்" ஊருக்குள் சாஸ்திரியார் கொட்டம் அடங்கிவிட்ட விஷ யமே எங்கும் பிரஸ்தாபமாயிருந்தது. இவரது குடும்பத்தை பகிஷ்கரிப்ப தற்கு வேண்டிய முயற்சிகளைப்பற்றி மற்றவர்கள் கூடிக் கூடிப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

*		*		*

சங்கரன் சீமைக்குச்சென்று மூன்று வருடங்கள் கழிந்தன. இப்போது பாரிஸ்டர் சங்கரன் ஆய்விட்டான். இனி நாமும் சங்கரனைப்பற்றிக் கூடிய வரை மரியாதையான வார்த்தைகளையே பிரயோகம் செய்வோம். நமது பாரிஸ் டர் சங்கரன் பம்பாய் துறைமுகத்தில்வந்து இறங்கிச் சென்னைவந்து சேர்ந் தார். திங்கட்கிழமை போட் மெயிலில் திண்டுக்கல் வருவதாகத் தந்தைக்குத் தந்தி கொடுத்திருந்தார். கிராமமானதால் தந்தி மறுநாள் தான் கிடைத்தது. மகனுடைய வரவைக் குறித்து திரிபுரசுந்தரி அம்மாள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. சுந்தரேச சாஸ்திரிகள் எண்ணெயில் விட்ட பணியாரம்போல் துள்ளிக்கொண்டிருந்தார். "அவனுக்கு இங்கே என்ன வேலை. அவன் எனக்கு மகனுமல்ல நான் அவனுக்குத் தகப்பனுமல்ல. அந்தத் தரித்திரம் பிடித்த சண்டாளப் பயல் என் முகத்திலேயே விழிக்கக் கூடாது" என்று ஆவேசத்தோடு சுடு



சொற்பிரயோகம் செய்துகொண்டிருந்தார். மகன் விஷயம் எப்படியோ இருக்கட்டும். ஊரார் குடும்பத்தையே பகிஷ்கரித்து விடுவார்களே என்ற

திசில் ஒன்றே சாஸ்திரிகளைப் பலமாக வாட்டிற்று. "காணாத சீமையிலிருந்து கடல் கடந்து வரும் மகனை எப்படிப் பார்க்காமலிருப்பேன்?" என்று திரிபுரசுந்தரி அம்மாள் தேம்பித் தேம்பி அழுதாள். சாஸ்திரிகள் பல்லை நெரித்து நெரித்து எரிந்து விழுந்துகொண்டிருந்தார். ஏனைய இரண்டு குமாரர்களும் "வந்தால் வரட்டுமே உண்ணவேண்டாம் தின்னவேண்டாம்; அவன்பாட்டுக்குப் பார்த்துக்கொண்டு பேசிவிட்டுப் போகிறான். அதனால் என்ன பாதகம்?" என்று மத்தியஸ்தம் செய்துகொண்டிருந்தார்கள். இரவு கழிந்தது. தாயார் மகன் வரவை நோக்கித் தூங்கவே இல்லை. சாஸ்திரிகளும் இராமுழுதும் தூக்கம் பிடிக்காமல் முணுமுணுத்துக்கொண்டும் ஈசுவரனை அழைத்துக்கொண்டும் காலங்கழித்தார்.

திங்கட்கிழமை சுமார் 11½ மணிக்கு சாஸ்திரிகள் வீட்டுவாயிலில் மோட்டார் ஒன்று காற்று வேகமாக வந்துநின்றது. ஊருக்குள் சமாச்சாரம் காட்டுத்தீப்போல் பரவிக்கொண்டிருந்தது. சங்கரன் சகோதரிகள் மற்றவர்கள் தங்களைப்பற்றி நினைப்பதைக் குறித்து லக்ஷியம் செய்யாமல் ஆவலோடு வரவேற்றனர். பெரிய அண்ணன் காரிலிருந்து சாமான், பெட்டி வகையறாக்களை எடுத்துவந்தான். இரண்டாவது அண்ணன் தம்பியின் வரவை எல்லாருக்கும் முன்னே போய்த் தாயாருடன் சொன்னான். சாஸ்திரிகள் பகிஷ்கார பிசாசினால் அறையப்பட்டு விழித்தது விழித்த வாக்கில் உட்கார்ந்து விட்டார். கன்றைக்கண்ட பசுவைப்போல் தாயார் ஓடி வந்து தழுவினாள். இதற்குள் கும்பல் குவிந்து விட்டது. மிஸ்டர் பாரிஸ்டர் சங்கரன் பழைய சங்கரன்தான் என்று யாராலும் அடையாளங்கண்டு உறுதி செய்துகொள்ள முடியவில்லை. தலைமூன்று சுருள் கிராப்பு, மூக்கில் கண்ணாடி, மூக்கிற்கு நேர் கீழ்மாத்திரம் கத்தரிக்கப்பட்ட குச்சமீசை, சூட்டு, பூட்ஸ் முதலியவற்றைக் கண்டால் நமது சங்கரனை பிராமணன் என்று சொல்ல பிரமாவினாலுங் கூட முடியாது.

ஆச்சரிய வசப்பட்ட ஜனங்கள் அவனைப்பற்றிப் பேசிக்கொண்ட விஷயங்களை இங்கு விவரிக்க இடமில்லை. சாஸ்திரிகளால் பிரஷ்டத் தீர்ப்பு தண்டனை பெற்றவர்களெல்லாம் அவனுடைய திருமாளிகையில் தாராளமாக நுழைந்து "ராயாளம்" விட்டுக் கொண்டிருந்தார்கள். பழிக்குப் பழிவாங்க வேண்டுமென்ற தீர்மானங்களும் குறிப்பிட்ட சிலரால் அங்கேயே நிறைவேற்றப்பட்டன. நிற்க, சுந்தரேச சாஸ்திரிகளுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதென்றே நினைக்கவேண்டியிருந்தது. தமது குடும்பத்துக்கே அனர்த்தம் வந்து விட்டது என்று முடிவுசெய்து விட்டார். இதுகாறும் சர்வாதிகாரியாக இருந்து விட்டு இனி இந்த ஊரில் மானங்கெட்ட காலக்ஷேபம் செய்வதா என்று ஒரே அடியாகக் காசியாத்திரை செல்லத் தீர்மானித்தார். அன்று இரவே யாரிடமும் சொல்லாமல் வேண்டிய பணத்தை எடுத்துக்கொண்டு வெளியேறி விட்டார்.

*　　*　　*　　*　　*　　*

விஜயாம்பாளும் நமது சங்கரனும் சிறுவயதில் தங்கள் கிராமப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து வாசித்தவர்கள். இருவரும் அத்தியந்த நண்பர்கள். அரைக்கணமும் விட்டுப் பிரிய மாட்டார்கள். அடிக்கடி இருவருக்கும் சிறு சிறு சண்டைகள் நிகழ்ந்தாலும் "நீர்கிழிய எய்த வடுப்போல்" ஒன்றாகி விடுவர். விஜயாளுக்குக் கலியாணம் நடந்த பின்பு சங்கரன் அவ்வளவாக நெருங்குவதில்லை. அவனும் மதுரைக்குச் சென்று படித்துக் கொண்டிருந்தான். விஜயாள் சங்கரனைப்பற்றி அடிக்கடி விசாரிப்பாள். விடுமுறைக் காலங்களில்

சங்கரன் ஊருக்கு வந்தால் தினத்திற்கு இரண்டு தடவையாவது பத்மநாப சாஸ்திரிகள் வீட்டிற்குப் போகாமலிரான். இன்டர்மீடியட் பரீக்ஷையில் சங்கரன் தவறிய பொழுதெல்லாம் விஜயாள் துக்கப்படுவதுண்டு. அவன் சீமைக்குப் போனது அவளுக்குப் பிடிக்கவில்லை. இருந்தாலும் பெரிய உத்தியோகம் கிடைக்கும் என்ற எண்ணம் அவளைச் சமாதானப் படுத்திக் கொண்டிருந்தது.

சங்கரனும் சந்தித்த காலங்களில் தற்கால ராஜீய சமூக மத விஷயங்களைப்பற்றி அவளோடு சம்பாஷிப்பதுண்டு. பக்குவமான விஷயங்களைப் புகட்டியிருந்தான். "இங்கிலீஷ் படிப்பதால் தலைகிறுகிறுத்துத் திரியும் சிலரைப் போன்றவன் அல்லன் நமது சங்கரன்; எவ்வளவு புத்திசாலித்தனம்! என்ன மரியாதை! பாலிய ஸ்நேகத்தை மறக்கவே இல்லையே!" என்று தன் பெற்றோரிடம் விஜயாள் அடிக்கடி சொல்வது வழக்கம்.



* *

மிஸ்டர் பாரிஸ்டர் சங்கரன் ஊர் க்ஷேமாதிசயங்களை விசாரிக்கும் போது விஜயாள் விதவையான விபரம் தெரிய வந்தது. அவருக்கு அடக்க முடியாத துக்கம் வந்துவிட்டது. விஜயாளுடைய தாயாரும் சங்கரனைப் பார்க்க வந்திருந்தாள். தனது அருமையான ஒரே புத்திரியின் தௌர்பாக்கியத்தைச் சொல்லிச் சொல்லிக் கண்ணீர்விட்டாள். இவன் பலவாறு தேறுதல் கூறினான். விஜயாளைப் பார்க்கவேண்டுமென்ற சிந்தனை சங்கரனுக்குப் பலமாக ஏற்பட்டது. அன்று சாயங்காலம் பத்மநாப சாஸ்திரியார் வீட்டிற்குச் சென்றான். அப்போது சாஸ்திரியார் தோட்டத்திற்குச் சென்றிருந்தார். அவரது மனைவியும் வீட்டில் இல்லை; காய்கறி வாங்கச் சென்றிருந்தாள். விஜயாள் ஏதோ வீட்டு வேலைகளைச் செய்து கொண்டிருந்தாள். சங்கரன் வீட்டிற்குள் பிரவேசித்து விஜயாளைக்கண்டு வியந்து அசைவற்று நின்றான். சங்கரனைக்கண்ட விஜயாளுக்கும் துக்கம் சகிக்க முடியாததாய்ப் பொங்கிறது. கண்களில் நீர்

தாரை தாரையாய் வழிந்தது. விஜயாள் மிகுந்த புத்திசாலியானதால் அவ்வளவு துக்கத்தில் மூழ்கி யிருந்தாலும் மரியாதைக்குப் பஞ்சமில்லை. பக்கத்திலிருந்த நாற்காலியை இழுத்து, சங்கரனை உட்காரும்படி பணிவோடுவேண்டி, இருக்கச் செய்தாள். சங்கரன் விஜயாளின் ரூபலாவண்யத்தையும் இளமையையும் குணங்களையும் கல்வியையும் சாதுரியத்தையும் அவளுக்கு நேர்ந்த கதியினையும் நோக்கி ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கிவிட்டான். இந்தப் பரிதாபகரமான நிலைக்குக் கொண்டுவந்த போலி ஆசாரங்களின் மீது அடங்காத ஆத்திரம் கொண்டான். பொருளற்ற கட்டுப்பாடுகள் விஜயாளுக்கு விலங்காக இருக்கின்றதை நினைத்து உருகினான். காதலே கொலை செய்யப்பட்டிருப்பதை விஜயாளிடந்தான் கண்டான். பெற்றோர்களுக்கு இவளிடம் உண்மையான வாத்சல்யம் இருந்தால் இப்படிச் சும்மா இருப்பார்களா? என்று நினைத்தான். இவளை ஏன் நான் மணம் செய்து கொள்ளக் கூடாது? என்று சிந்தித்தான். இவளே எனக்கேற்ற நாயகி என்று தீர்மானித்தான். இவள் என்னிடம் அன்புடையவளாயினும் இதற்குச் சம்மதிப்பாளோ? தாய்தந்தையர் வாக்குப்படி நடப்பவளாயிற்றே என்று சந்தேகித்தான். தன்னைப் பிறர் நன்கு மதிக்கவேண்டும் என்ற ஆசையுள்ளவள்; என்னமோ பார்க்கலாம் என்று ஏதோ சொல்லுபவன் போல் எழுந்தான்; விஜயாளைச் சமீபித்து "விஜயா! நீ துக்கப்பட வேண்டாம். என்ன செய்வது? நடந்தது நடந்து விட்டது. இனிமேலாகவேண்டிய காரியங்களைப் பார்க்க வேண்டியதுதான் புத்திசாலித்தனம். உனக்கும் சமஸ்கிருதத்தில் பாண்டித்தியம் அதிகம். நீ சௌபாக்கியவதியாக வாழ்வதற்கு வேண்டிய ஆதாரங்கள் அதில் இருக்கின்றன. ஆனால் தைரியம் வேண்டும்" என்று புன்முறுவலோடு சிறப்பு நோக்கைச் செலுத்திச் சொல்லிக் கொண்டே போய்விட்டான் சங்கரன். அவனுடைய நிலைமையும், முறுவலும், பார்வையும் விஜயாள் மனதைக் கொள்ளை கொண்டன.

எல்லாம் தெய்வச் செயல். உலகத்தில் மக்கள் நினைக்கிறபடி என்ன நடக்கிறது? சாஸ்திரிகள் சாஸ்திரியார் வாழ்வு சதமாயிற்றா? பின்னர் நடந்த விஷயங்களைக் கவனிப்போம்.

* * *

சுந்தரேச சாஸ்திரிகளும் பத்மநாப சாஸ்திரியாரும் கெம்பீரமாக வீற்றிருந்து ஏழைப் பிராமணர்களின் மீது பிரஷ்ட—பகிஷ்கார—அபராதப் பிரயோகங்கள் செய்யும் ஊர்ப் பொதுத் திண்ணையில் பெருங் கூட்டம். இரவு சுமார் எட்டு மணியிருக்கும். அந்த ஊரில் முதலில் பணக்காரராயிருந்து பின்னர் கோர்ட்டு வியாச்சியங்களால் ஏழையான சுப்பராம தீக்ஷிதர் கூட்டமத்தியில் எழுந்து நின்று "அக்கிரஹாரத்தின் யோக்யதையே நாஸ்தியாய்ப் போய்விட்டது. என்ன அநியாயம்! ஒருவன் கிறிஸ்துவனை வீட்டுக்குள்ளே விட்டுக்கொண்டான். இன்னொருவன் அறுத்த முண்டையை தேவடியாள் மாதிரி வைத்திருக்கிறான். இவர்களை உடனே பகிஷ்கரித்து பிரஷ்டம் செய்து யாகம் செய்து கிராமசுத்தி செய்யவேண்டு" மென்றார். எல்லாரும் ஏககாலத்தில் ஆமோதித்தும் ஆதரித்தும் பேசித் தீர்மானத்தை ஏகமனதாக நிறைவேற்றிவிட்டுக் கலைந்தனர்.

மறுநாள் வேலைக்காரர் ஒருவரும் சாஸ்திரிகள் வீட்டுக்கு வரவில்லை. வண்ணான் நாவிதன் முதல் எல்லாரும் கட்டுப்பாட்டுக்கடங்கி வராமலிருந்து விட்டனர். சங்கரன் விஷயங்களை நன்கு உணர்ந்தான். இந்த ஊர் எப்படி இருந்தால் அவனுக்காக வேண்டியதென்ன? வீட்டு விஷயங்களைப் பின்னால் ஒழுங்குபடுத்திக் கொள்ளலாமென்று தீர்மானித்துக்கொண்டு ஒரு ஆள்

மூலம் பழனிக்குச் சொல்லிவிட்டு ஸ்பெஷல் கார் கொணர்ந்து வேண்டிய சாமான்களோடு மதுரைக்குப் புறப்பட்டுவிட்டான் சங்கரன்.

* * *

பாரிஸ்டர் சங்கரன் ஊரை விட்டுப்போன மறுநாள் காலை பத்மநாப சாஸ்திரியார் மனைவி தன்னை மீறி எழுந்த துக்கத்தைக் கூடியவரை சமாளித்துக் கொண்டு அங்குமிங்கும் அலைந்து கொண்டிருந்தாள். வீட்டிற்கு வந்தாள். இரவெல்லாம் தமக்கு நேர்ந்த கதியை நினைத்து நினைத்து தூக்கித்துக் கொண்டிருந்து விட்டு அப்போதுதான் கண்ணயர்ந்த பத்மநாப சாஸ்திரியாரைத் தட்டி எழுப்பி விஜயாள் எங்கே! பார்த்தீர்களா? என்றாள். தமது மனைவி கேட்ட திறுசைப் பார்த்து திடுக்கிட்டுப் போனார் சாஸ்திரியாரும். இல்லையே! என்ன சமாச்சாரம்? என்று கேட்டுக் கொண்டே எழுந்து விபரம் தெரிந்துகொண்டு அவரும் பரபரப்புடன் தேட ஆரம்பித்தார். இதற்குள் ஊருக்குள் குபார் கிளம்பிவிட்டது. எங்கும் விஜயாளைக் காணோம் என்ற பேச்சாகவே இருந்தது. விஜயாள் யோக்கியமான பெண்ணாயிற்றே! என்றார் சிலர். அவள் யோக்கியதையை நீங்கள்தான் மெச்சிக்கொள்ள வேண்டும்; யோக்கியமான கைம்பெண்தான் தாசிமாதிரி மினுக்கிக்கொண்டிருந்தாளாக்கும் என்றார் மற்றுஞ்சிலர். சங்கரன்தான் ஆள் வைத்து அடித்துக் கொண்டு போயிருப்பான். அவனுக்கூட அவன் வீட்டுக்குப்போய் பேசிக்கொண்டிருந்ததாகக் கேள்வி என்றார் வேறு சிலர். அக்கிரஹாரத்து ஜனங்களுக்குச் சொல்லவாவேண்டும்! சாஸ்திரியார் வீட்டில் விஜயாள் தாலியறுத்த தின இழவைக்காட்டிலும் பேரிழவாக இருந்தது. சாஸ்திரியாரும் அவருடைய மனைவியும் வீட்டைவிட்டு வெளியே வரவே இல்லை. அவர்கள் வீட்டுக்குப்போய் என்னவென்று கேட்பாரு மில்லை. எப்படியோ அந்த நாளும் கழிந்தது. அடுத்தநாள் தபாற்சேவகன் ஒரு கடிதம் கொண்டுவந்து கொடுத்தான். சாஸ்திரியார் அதைப் படபடப்பாய்ப் பிரித்துப் பார்த்தார். கடிதம் அடியில் வருமாறு:—

22—6—28.

தானப்ப முதலி அக்கிரஹாரம், மதுரை.

அப்பா அவர்களுக்கு,

அநேக நமஸ்காரம். க்ஷேமம். தாங்கள் கவலைப்படவேண்டாம். தாங்கள் சொல்லிவைத்த வாஸிஷ்ட வாக்கியங்களிலேயே எனக்கு மங்கலகரமான வாழ்க்கை யுண்டாக இடமிருப்பதாக அறிந்தேன். ஆனாலும் பூர்வாசாரங்களை அர்த்தமில்லாமல் கடைப்பிடித்தொழுகும் வைதிக கிராமவாசிகளிடையில் ஒன்றும் பலியாதென்று இங்கு வந்திருக்கிறேன். எனது நலங்கருதி நான் மறு விவாகம் செய்துகொள்ள உறுதி செய்துவிட்டேன். தாயாருக்குத் தேறுதல் கூறுங்கள். தங்கள் ஆசீர்வாதம் தேவை.

இங்ஙனம்,

தங்கள் பிரியமுள்ள

விஜயாள்.

இதைக்கண்டவுடன் பத்மநாப சாஸ்திரியாருக்குத் தலையில் இடி விழுந்தமாதிரி இருந்தது. மனைவியைக் கூவினார். இதுவும் தலைவிதியா என்று திகிலுடன் விஷயத்தைச் சொல்லிக்கொண்டே கூச்சலிட்டுப் புலம்ப ஆரம்பித்தார். மனைவியும் அடக்கமுடியாத ஆத்திரமும் துக்கமும் கொண்டாள்.

“வேறு என்ன செய்ய முடியும்? எழுந்திருங்கள்! வேறு யோசனை வேண்டாம். உடனே மதுரைக்குப் புறப்படுவோம். இங்கு யாரும் அறிவதற்கு முன்னமே எப்படியாவது சமாதானம் சொல்லி அழைத்துவந்துவிடலாம்” என்று சம்சாரம் சொல்லிக்கொண்டிருக்கும்போதே சாஸ்திரியார் பயணத்துக்குத் தயாரானார். இருவரும் உடனே மதுரைக்குப் புறப்பட்டுவிட்டார்கள்.

*　　　　*　　　　*

மதுரை பாராதவன் மாபாவி. தென்னிந்தியாவில் மதுரைக்கு இணையாக எந்த ஊரையும் சொல்ல முடியாது. மங்கலவாத்தியங்கள் இரவு பகலாக முழங்கும். மாதமோ ஆவணி. எந்த வீதியைப் பார்த்தாலும் கலியாண விமரிசைகளும், ஸ்வாமியை எழுந்தருளச்செய்யும் வைபவங்களும் கண்காட்சியாய் விளங்கும். (24-6-28-ல்) தானப்ப முதலி அக்கிரஹாரத்தில் நடந்த கலியாணம்தான் வெகு தடபுடலாயிருந்தது. ஜட்ஜு கலெக்டர் முதலிய பெரிய உத்தியோகஸ்தர்களும் பெரிய பெரிய வக்கீல்களும் மிராஸ்தார்களும் கலியாண வீட்டில் நிறைந்திருந்தனர். பெண்ணும் மாப்பிள்ளையும் விசேஷமாக அலங்கரிக்கப்பட்ட மணவறையில் உட்காரவைக்கப்பட்டிருந்தனர். சகல வாத்தியங்களும் கோஷித்துக்கொண்டிருந்தன. வயோதிக பிராமணரொருவர் கையில் மூட்டையொன்றை வைத்துக்கொண்டு திடீரென்று பெருமூச்சுவிட்டுக்கொண்டு சபைக்குள் நுழைந்து வந்தார். மணப்பெண்ணான நமது சௌபாக்கியவதி விஜயாள் உடனே எழுந்து தந்தை பாதத்தை நமஸ்கரித்தாள். சாஸ்திரியாரும் “தீர்க்க சுமங்கலீ பவ” என்று ஆசீர்வதித்தார்.

## ஆனந்தபோதினி வாரப் பத்திரிகை.

சென்ற மாத “ஆனந்தபோதினி” சஞ்சிகையில் குறிப்பிட்ட நமது வேண்டுகோட்கிணங்க நூற்றுக்கணக்கான கனவான்கள் “ஆனந்தபோதினி” வாரப்பத்திரிகைச் சந்தாதாரராகத் தம்மைச் சேர்த்துக்கொள்ள ஆர்டர் கொடுத்து வருகிறார்கள். வாரப் பதிப்பின் ஆரம்ப வேலைகள் துரிதமாக நடந்துகொண்டிருக்கின்றன. அடுத்த மாத சஞ்சிகையில் வாரப் பத்திரிகையின் மாதிரித் தாளை அனுப்பிவைப்போம். நேயர்களின் ஆதரவு பூரணமாயிருப்பதாக.

| | | | | |
|---|---|---|---|---|
| உள் நாடு வருட சந்தா | ரூபா | 3 | 0 | 0 |
| ,, 6—மாத சந்தா | ,, | 1 | 12 | 0 |
| வெளி நாடு வருட சந்தா | ,, | 4 | 0 | 0 |

(வெளி நாடுகளுக்கு ஆறு மாதச் சந்தா இல்லை.)

பத்திராதிபர்.

# ஆனந்த சந்திரோதயம்.

S. V. V.

"திரிகரணசுத்தி" என்பது மனம் வாக்கு காயம் தூய்மையாயிருப்பது. நாம் செய்யும் நன்மை தீமைகளுக்கு இவையே காரணம். ஒருவனைக் கொல்லவேண்டுமென்றெண்ணுவது (மனம்) பாவம். அவனைக் கொலை புரிவேன் என்று சொல்லுவது வாக்கு. அவனைக் கொன்றேவிடுவது காயம் (செய்கை). இம்மூன்றும் குற்றங்களேயாயினும் அவற்றிற் கேற்படும் தண்டனைகளுள் தாரதம்யமுண்டு. மனமலர் தூவி பகவானைப் பூஜிப்பது புண்ணியம். அவரை வாயாரப் புகழ்ந்தேத்துதல் அதனிலும் சிலாக்கியம். இவற்றைவிட பாபபுண்ணியச் செயல்களுக்கு ஆதாரமாயிருந்து அவற்றைச் செய்யத்தூண்டும் மனதையடக்கி சத்யகர்மங்களைச் செய்வது சாலவும் சிறந்தது. மனிதன் தன் மனம்போன போக்கெல்லாம் போகாது, நன்னெறியினின்றும் வழுவாதிருக்கவே நமது மதக்கொள்கைகளில் கர்மானுஷ்டானங்களே மலிந்து விளங்குகின்றன. 'கர்மாவைப் புறக்கணித்தவனுக்குப் பேரின்பமே இல்லை" என்று பகவத்கீதை யுபதேசிப்பதும் இக் கருத்துப்பற்றியே யாகும். இப்படிக் கர்மாவை விடாது செய்பவன் முதலில் கர்மயோகியாய்ப் பின்னர் படிப்படியாய் பக்தி மார்க்கத்தை யனுஷ்டித்து முடிவில் ஞானியாகின்றான். ஆகையால், திரிகரணசுத்தி தீவிர கர்மானுஷ்டானத்தால் எய்துதற் குரியதேயாகும்.

***

"மலையிலே விளைந்தாலும் உரலிலேயே மசியவேண்டும்" என்பது போல் எச்சமயத்தைச் சார்ந்தவனுயினும் அவன் அத்வைதமதத்தை அனுஷ்டித்தே தீரவேண்டும். துவைதம், அத்வைதம், விசிஷ்டாத்வைதம், துவைதாத்வைதம், சுத்தாத்வைதம், பாவனாத்வைதம் ஆகிய எல்லா மதங்களும் அத்வைதத்திலேயே வந்து சேருகின்றன. அத்வைதிகளோ எல்லா மதத்தினரையும் தழுவி யழைப்பவர். எந்தச் சமயிகள் எந்த பாஷையில் சர்வேஸ்வரனுடைய நாமத்தைச் சொல்லி வழிபட்டாலும் அவையாவும் ஈஸ்வரனையே யடைகின்றன. மழைநீர் மலையிலிருந்து பூமியின் எந்தெந்த பிரதேசங்களில் எப்படி எப்படிச் சுற்றியும் வளைந்தும் பாய்ந்தாலும் அவை முடிவில் கடலிலேயே விழுகின்றன. எத்தகைய வீரவைஷ்ணவ சைவ சமயானுசாரிகளாயினும் எல்லையில் அவர்கள் அத்வைத வேதாந்தமாகிய சமுத்திரத்திற் கலந்து பகவானைத் தரிசிப்பது திண்ணம். இதைத்தான் ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகள் புனருத்தாரணஞ் செய்தார்.

***

"அறியாமையால் விளைவது அனர்த்தம்" நவீன ஹிந்துக்கள் பணத்தைக் கொட்டிப் பாடுபட்டுப் படிப்பதன் பயனாக முதல்முதலில் நமது ஆன்

றோர்களை மூடர்களென்று கூறிப்பழிக்க முற்படுகிறார்கள். எதிலும் அவர்கள் குற்றங்காண்பது சுலபமாயிருக்கிறது. தாங்கள் அறியாத விஷயங்களைப் பற்றி அவர்கள் பெரிதாகப்பேசத் தொடங்கிவிடுகிறார்கள்; பக்தர்களை உதாசீனமாகப் பேசுகிறார்கள். ஆராயாது குறைகூற அவர்கள் சிறிதும் பின் வாங்குவதில்லை. பக்தர்கள் பகவந்நாம சங்கீர்த்தனஞ் செய்வதைக் கண்டு 'இதெல்லாம் வேஷம். உண்மையான பக்தியிருந்தால் மனத்திற்குள்ளேயே தியானஞ் செய்யமாட்டார்களா?'' என்று அவர்கள் நகையாடுகிறார்கள். ஓர் மரத்தடியில் நின்றுகொண்டு 'காக்கைகளே பறந்துபோங்கள்' என்றால் காகங்கள் பறந்துபோமோ? கத்தினாற்றானே அவை 'காகா' வென்று கரைந்து பறந்தோடுகின்றன. அதுபோல மனமாகிய விருக்ஷத்தின் பாசமென்ற கிளைகளில், வந்தமர்ந்திருக்கும் மாயையென்னும் காகங்களை வெருட்டவே பக்தர்கள் 'சிவா! ராமா! கிருஷ்ணா' என்று கூச்சலிட்டு பஜனை செய்கிறார்கள். இதுபோல் ஒவ்வொரு விஷயத்திலும் ஒவ்வொரு பொருட்சுவையுண்டு. இவற்றையெல்லாம் பெரியார் வாய் அடக்கமாய்க் கேட்டுத் திருந்துபவனே ஆனந்த மடைவான். அஃதின்றிப் பெரியோர்களைத் துச்சமாயெண்ணித் திரிபவன் அறியாமை மிகுந்து அனர்த்தத்தையே அடைவானென்பது நிச்சயம்.

***

"சுவானுபவமே சுத்தானந்தம்'' நூல்களைக் கற்பதால் எவரும் இன்பமனுபவிக்க முடியாது. காதலைப்பற்றி எவ்வளவு தெளிவாக உணர்த்தும் புத்தகங்களை வாசித்தாலும் அதன் சம்பிரமங்களைச் சுவானுபவத்தில் அறிவது போலாகாது. வேதசாஸ்திர இதிகாச புராணங்களில் எத்தனை பாண்டித்யமடைந்தாலும், சுவானுபூதியிலே சுத்த பிரம்மத்தைத் தரிசித்தாலல்லது அந்த பிரம்மநிலைக்குரிய ஆனந்தம் கைவரமாட்டாது. பிரம்மஞானத்தையடைய வேண்டி தர்க்கித்தும் வாதித்தும் 'அப்படியல்ல இப்படி' என்று வம்பு செய்தும் அலைந்தும் திரிந்தும் கஷ்டப்படுகிறார்கள். பிரம்மஞானிகள், பரப்பிரம சொரூபத்தைத் தரிசித்து சுத்தானந்தராயின் பின் வாய் பேசுவதில்லை; மூர்த்திகளைத் தரிசிப்பதில்லை. பிரபஞ்ச விஷயங்களனைத்தும் அவர்கள் உள்ளத்தில் நசித்துப் போகின்றன. சருக்கரை தித்திக்கும், என்று புத்தகத்தில் எழுதப்பட்டிருப்பதை வாசித்த மாத்திரத்தில் அந்த இனிப்பு நாவுக்கு ஏற்படுகிறதில்லை. சருக்கரையை வாயிற்போட்ட மாத்திரத்திலேயே அந்த தித்திப்பின் சுவானுபவம் உண்டாகிறது. அதுபோல பகவானும் ஓர் சருக்கரைக்கட்டிதான். அதன் சுவை கண்டாருக்கே தெரியும் அதனாலடைதற்குள்ள ஆனந்த நிலை. வீண்வாசா ஞானம் மனத்தின்கண் அகந்தையை வளர்க்கும்.

***

"அத்திக்கனியைப் பிட்டுப் பார்த்தால் அத்தனையும் புழு' என்று ஓர் பழமொழியுண்டு. சிலர் ஆடம்பரமாகப் பேசுவார்கள்; அவர்கள் அனுஷ்டானத்தில் தாம் கூறும் விஷயங்களைக் கொண்டிருக்க மாட்டார்கள். பலர், பக்தி ஞானம் என்று உபந்நியசிப்பார்கள். அநேகர் பொருளிலேயே கண்ணுடையவராயிருப்பார்கள். சிலர் பட்டதாரிகளா யிருப்பார்கள்; அவர்களிடம் புலமை தகுந்தபடியிராது. சிலர் கதர்கட்ட வேண்டுமென்று பேசுவார்கள்; மேடைகளில் கதருடையுடன் தோன்றுவார்கள்; ஆனால் அவர்கள் வீட்டில் தரிப்பது சீமைத்துணியாகவே இருக்கும். ஆகையால், பேசுவதாலும், படித்திருப்பதாலும், தோற்றத்தாலும் எவரையும் நாம்கண்டு மயங்கிவிடலாகாது.

அதனாற்றான் சாதுக்கள் சற்குருவை நாடி, எங்கேயாவது ஓர் மகாத்மாவைத் தரிசிக்க மாட்டோமா வென்றலைகின்றார்கள். அவர்கள் வருந்தியடையும் பலனும் விசேஷமுடையதாகவே இருக்கும்.

***

“கோயிலில்லா வூரில் குடியிருக்க வேண்டாம்” என்பதால் ஆலய தரிசனம் மக்கள் அடைத்தேறுதற்கு அவசியமென்பது போதரும். கோயிலுக்குப் போனாற்றான் கடவுளைத் தரிசிக்கலாமா? அவர் எங்கும் நிறைந்த பரம்பொருளல்லவா? என்று சாமானிய ஜனங்கள் ஏதோ தாம் அனைத்தையும் வென்றவர்கள்போல் பேசுவார்கள். தண்ணீர், விடாயைப்போக்குமென்பது வாஸ்தவமே யானாலும் சமுத்திர ஜலத்தை இரண்டுகை அள்ளி அருந்தலாமா? சில இடங்களில் தண்ணீர் உப்பாயிருக்கும்; சில இடங்களில் சேறுயிருக்கும்; சில நீர்நிலைகளில் பாசி படர்ந்திருக்கும். இவையெல்லாம் அருந்துதற்கேற்றதாகா வல்லவா? எல்லாம் தண்ணீரேயானாலும், ஓரிடத்திலுள்ள தண்ணீர் சௌசத்திற்குத்தானாகும், மற்றோரிடத்திலுள்ள தண்ணீரில் நீராடலாம். பிறிதோரிடத்திலுள்ளதில் ஆடை துவைக்கலாம். ஆனால், எந்த ஜலமானாலும் சூரிய வெப்பத்தால் நீராவியாக மாறிவிடுகிறது. இவ்வுண்மை போலவே பகவான் சர்வ வியாபியானாலும் நாம் அவரைக் கோயிலில் மட்டுமே தரிசிக்கவேண்டும். ஆனால், பிரம்ம தேஜஸையடைந்த மகாத்மாக்கள் எந்த ஜலத்தையும் மேகமாக்கும் வெய்யவனைப்போல அத்வைத நிஷ்டர்களாகி ‘சர்வம் பிரம்மமயம் ஜகத்’ என்ற சுவானுபூதியை யடைகிறார்கள். ஆனால், நாம் அப்படி யொழுக முடியாது. சரியான பரிபக்குவ நிலை அடையும்வரை கோவிலிற்சென்று கும்பிட்டே தீரவேண்டும். கோவிலில்லாத வூரில் குடியிருக்கவும் கூடாது.

## ஆனந்தம் அமிர்தமான கதை.

தேவரைக்காட்டிலும் ஆங்கில நியாயஸ்தலங்களுக்குச் சக்தியும் அருளும் அதிகம். ஒரு துளி அமிர்தத்துக்கு நமது தேவர்கள் பட்டபாட்டைக் கற்பனைக் களஞ்சியமான வியாசனிடம் தான் கேட்கவேண்டும். அமிர்தம் கிள்ளுக்கீரை யல்ல. இது கிடைக்க விஷ்ணு சகாயம், மந்தரகிரி, வாசுகி, சந்திரன், திருப்பாற்கடல், எதிரிகளின் (அசுரர்கள்) உதவி, தேவர்களின் தேகப்பிரயாசை ஆகிய இவ்வளவு சாதனங்கள் தேவையாயிருந்தன. சென்னை நியாயஸ்தலம் ஒன்று ஒரு வழக்கில் அச்சாதனங்களில் ஒன்றையும் வேண்டாமல் அரூபகுணமான ஆநந்தத்தைக் கெடுத்து அமிர்தத்தைக் கொடுத்துவிட்டது. இந்த வர்த்தமானத்தை சென்னைப் பத்திரிகைகள் ஏனோ வெளியிட மறந்துவிட்டன. அமிர்தம் பஞ்சாமிர்தமானால் இவற்றிற்குச் சுவை உதிக்கும்போலும்!




## வேம்பின் குணம்.

(டாக்டர். மே. மாசிலாமணி முதலியார்.)

இந்தியாவிலும் பர்மாவிலும் வேப்ப மரங்கள் ஏராளம். வேம்பைத் தமிழில் வேப்பமரம் என்றும், தெலுங்கில் "வேப்ப மானு" என்றும், கன்னடத்தில் "பேவின மர" என்றும் ஆங்கிலத்தில் "மர்கோஸா ட்ரீ" என்றுங் கூறுவார்கள். இந்துக்கள் வேப்பமரத்தை தெய்வமாக அதாவது பராசக்தியாகப் போற்றுகிறார்கள். இதனால் மக்களுக்குண்டாகும் பெரும்பயன் கருதி யாரும் வெட்டி அழித்துவிடாமல் நன்கு பாதுகாத்து வளர்த்துவரும் பொருட்டு நமது முன்னோர் இத்தகைய ஏற்பாட்டைச் செய்துவைத்தனர் என்று கொள்ளலாம்.

வேப்ப மரங்களை ஊரைச்சுற்றியும் தோட்டங்களிலும் வீடுகளிலும் வைத்து வளர்த்தல் ஆரோக்கிய வாழ்வுக்கு ஆதாரமாகும். வேப்பமரங்கள் அடர்ந்துள்ள கிராமங்களில் வேப்பங்காற்றை உட்கொள்வோரனைவரும் தேகாரோக்கியம் வாய்ந்தவராகவும் தூயமன முடையவராயும் காணப்படுவர். இம்மரங்கள் மிகுதியாக உள்ள ஊர்களில் விஷவாயு சம்பந்தமான வாந்திபேதி, பிளேக் சுரம், வைசூரி முதலான நோய்கள் பரவமாட்டா. நமது பெண்கள் அதிகாலையில் எழுந்து ஸ்நானம் செய்துவிட்டுச் சேர்ந்து வளர்ந்த வேப்பமரத்தையும் அரசமரத்தையும் வலம் வருதலை நீங்கள் பார்த்திருக்கலாம். பெரும்பாலும் நாளொன்றுக்கு நூற்றெட்டுச் சுற்றாக ஒரு மண்டலம் அதாவது 48-நாட்கள் இவ்விதம் செய்வார்கள். இப்படிச் சுற்றிவருவதால் தேகப்பயிற்சி, சுவாச பந்தனம், சுவாசிக்கும்போது வேப்பங்காற்றுக் கலப்பதால் இரத்தசுத்தி, சூதகப்பை வீக்கம், சூதக வலி, சூதகவாயு முதலான வியாதிகள் நீங்கிப் புத்திரசந்தானம் உண்டாகும். புத்திரப்பேறு இல்லாத இளம் பெண்களைச் சாதாரணமாகச் சுற்றச் சொல்வது வழக்கம். அரசமரத்தின் காற்றும் இலையும் கருப்பப்பையின் நோய்களை நிவர்த்திசெய்யும்.

வேப்பங்கொத்தை ஒடித்துக் குழந்தைகளின் முகத்திற்கு நேரே விசிறியை வீசுவதுபோல் வீசி அதன் காற்றைக் குழந்தைகள் உட்கொள்ளும்படிச் செய்தால் அக்காற்றானது குழந்தைகளின் மனச்சோர்வு, அதனாற்காணும் சோகம் அற்பசுரம் முதலியவற்றைப் போக்கிக் குதூகலத்தை உண்டாக்குகிறது.

அம்மைநோய் கண்டவர்களிடம் வேப்பிலையை வைத்திருந்தால் அந்நோயின் வேகம் குறைந்துவிடுகிறதோடு உடம்பெரிச்சலும் விகாரமும் தோன்றாமலிருக்கும். இரத்தமும் விரைவில் சுத்தியாகிவிடுகிறது. வேப்பிலைக்கு நுண்ணிய அம்மைக் கிருமிகளையும் அவை வியாபிக்கும்போதுண்டாகும் துர்நாற்றத்தையும் தடுத்து அந்நோய் மேன்மேலும் பரவாமற்செய்யும் சக்தி மிகுதியும் உண்டு. வாந்திபேதி வியாதிக்கும் இம்முறையையே அநுசரிக்கவேண்டும்.

புட்டாளம்மை என்னும் வியாதிக்கு வேப்பிலையையும் மஞ்சளையும் அரைத்து மேலே பூச வீக்கம் குறைந்துவிடும். நிற்க, இந்த இலையை

அரைத்து விரல்களிற் காணும் உகிர்ச் சுற்றுகளுக்கும், வீக்கங்களுக்கும், கட்டிகளுக்கும் பற்றுப்போடலாம்.

ஒரு பிடி வேப்பிலையும் நாற்பது மிளகும் சேர்த்து அரைத்துச் சுண்டைக்காய் பிரமாணம் காலை மாலைகளிற் சாப்பிட்டு வந்தால் வயிற்றிலுள்ள திமிர்ப்பூச்சிகள் நாசமாகும்; பித்தகுன்ம வியாதிகள் போகும்; அஜீரணம் நீங்கும்; சுரம் குறையும். வீட்டுக்குத் தூரமாகுங் காலத்தில் காணும் வயிற்று வலிக்கு அரைத்த வேப்பிலை சுண்டைக்காய் பிரமாணமும், பெருங்காயம் கடலைப் பிரமாணமும் ஒன்றுசேர்த்து வீட்டுக்குத் தூரமான முதனாட் காலை அல்லது வீட்டுக்குத் தூரமான காலத்தில் ஒருவேளை கொடுக்கக் சூதக வலி நீங்கிக் கருப்பம் தரிக்கும்.

காற்படி தண்ணீரில் ஒரு பிடி வேப்பிலையை இடித்துப்போட்டு அரைக் கால்படியாகச் சுண்டக் காய்ச்சி மூன்றுமணி நேரத்திற்கொருமுறை ஒரு அவுன்ஸ் வீதம் உட்கொண்டால் விஷசுரம் நீங்கும், இரத்த விருத்தி உண்டாகும். இரத்தக் கொதிப்பு அடங்கும். இந்தக் கஷாயத்தை இரணங்களை அலம்பவும் உபயோகப்படுத்தலாம். ஆசனத்தின் மூலம் "எனிமா" எடுத்துக்கொண்டால் ஆசனக் கிருமிகள் நசித்து நமை நீங்கும்.

விஷநோய் காணுங் காலங்களில் வீடுகளிலும், அறைகளிலும், வாயிற் படிகளிலும், வீதிகளிலும் வேப்பிலையைக் கட்டி அதன் சத்துக்கலந்த காற்றை நாம் உட்கொண்டால் அவ்விஷநோய்கள் அணுகமாட்டா.

வேப்பிலை 4 பங்கும், மிளகு 2 பங்கும், கொரிபாஷாணம் $\frac{1}{16}$ பங்கும் சேர்த்துக் கல்வத்தில் போட்டு அரைத்துக் கடலைப்பிரமாணமாக மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்தி நாள் ஒன்றுக்கு 3 மாத்திரை காலை, உச்சி, மாலை வேளைகளில் ஒவ்வொன்றாகச் சாப்பிட்டு வந்தால் முறைக்காய்ச்சல், குளிர் சுரம் முதலியவை நீங்கும். சிறுவர்களுக்கு 1 மாத்திரையில் $\frac{1}{4}$ பங்கு முதல் $\frac{1}{2}$ பங்கு வரை கொடுக்கலாம். வேண்டியவர்கள் பிணிக்குத்தகுந்தபடி கொரி பாஷாணத்திற்குப் பதிலாய் வீரம், தாளகம், பூரம், மயில்துத்தம், லிங்கம் ஆகிய இவைகளில் ஒன்றைச் சேர்த்து அரைத்துவைத்துக்கொள்ளலாம். சிலர் இம்முறையைப் புடம்போட்டு பஸ்பமாகவும் உபயோகிக்கிறார்கள். பஸ்பமானால் $\frac{1}{4}$ கிரெயினிலிருந்து ஒரு கிரெயின்வரை நெய், தேன், வெள்ளாட்டுப்பால், வெண்ணெய், முலைப்பால் ஆகிய இவைகளில் அநுபானித்துக்கொடுக்கலாம்.

பாஷாணம் சேர்த்துச்செய்யப்படும் மருந்தை விஷசுரங்களுக்கும் குளிர் சுரங்களுக்கும் கொடுக்கலாம். இதைக் கஷாயங்களிலும் தேனிலுங் கொடுக்கலாம்.

தாளகம் சேர்ந்த மருந்தை கபவாத சுரங்களிலும், சுவாச காசங்களிலும் கஷாயம் அல்லது நெய்யில் கொடுக்கலாம்.

வீரம் சேர்ந்த மருந்தை பாரிச வாய்வு, கீல்வாய்வு, உஷ்ணவாய்வு கொடுக்கு வியாதிகளுக்குக் கொடுக்கலாம். அநுபானம் நெய் அல்லது பால்.

பூரம் சேர்ந்த மருந்தை விஷசுரம் மாந்தசுரம், பெண்களுக்கு உதிரத்தால் உண்டாகும் சுரம், உதிரச் சிக்கல், மேகப்புண் ஆகிய வியாதிகளுக்குக் கொடுக்கலாம். அநுபானம் முலைப்பால், வெள்ளாட்டுப்பால், தேன். குழந்தைகளுக்கு மிகவும் விசேஷமானது.

மயில் துத்தம் சேர்ந்த மருந்தை கல்லீரல் வீக்கம், சுரம், வயிற்றுவலி, வாந்தி ஆகிய இவைகளுக்கு உபயோகப்படும். அநுபானம் தேன், நெய், கஷாயங்கள்.

லிங்கம் சேர்ந்த மருந்தை மேக சுரங்கள், வாத சுரங்கள், உஷ்ணபேதி சீதபேதிகளுக்குக் கொடுக்கலாம். அநுபானம் நெய், தேன்.

5 பலம் வேப்பிலையையும், 5 பலம் காிமஞ்சளையும் இடித்து 4 படி தண்ணீரில் போட்டு ஒரு படியாகச் சுண்டக் காய்ச்சிக் கருப்பப்பையை அலம்பி வந்தால் அதிலுள்ள இரணம் ஆறி அழுக்கு வெளியாகும். கெர்ப்ப ஸ்திரீகளுக்கு மிகவும் உபயோகமானது. சரீரத்திலுள்ள எந்த இரணத்தைக் கழுவினாலும் சீக்கிரத்தில் ஆறும்.

$\frac{1}{2}$ வீசை வேப்பிலையை இடித்து 4 படி ஜலத்தில் கலந்து $\frac{1}{2}$ படியாகச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி 1 வீசை கற்கண்டு சேர்த்துச் சர்ப்பத்தாகச் செய்து காலை மாலைகளில் $\frac{1}{4}$ அவுன்ஸ் முதல் $\frac{1}{2}$ அவுன்ஸ் வரை உபயோகித்தால் நாட்பட்ட மேகசுரங்கள், விஷசுரங்கள், பலவீனம் முதலிய நோய்கள் நிவர்த்தியாகும். இரத்த சுத்தியையும் புத்தி சூட்சுமத்தையும் உண்டாக்கும்.

வேம்பின் ஈர்க்கைக் கஷாயம் வைத்து நாட்பட்ட சுரங்களுக்குக் கொடுப்பதுண்டு. வேறு மருந்தைக் கூட்டியுங் கொடுக்கலாம்.

## வேம்பின் தனித்தனி உறுப்பின் குணமும் உபயோகமும்.

வேம்பின் வேர்:—முறை வியாதிகள், இரத்தசுத்தி, மேகசுரங்களுக்கு நல்லது.

பட்டை:—மேற்கூறிய வியாதிகளோடு சருமப் படைகள், மேகப் புண்களுக்கு உபயோகமாம்.

இலை:—வீக்கங்கள், இரத்தசுத்தி, விஷக்கிருமிகளைக் கொல்லல், விஷ வாய்வுகளைத் தடுத்துச் சுகாரத்தை உண்டு பண்ணல் முதலியவற்றிற்காகும்.

பழம்:—சுவாசக் குழாயின் இரணங்களை ஆற்றல், மூளைக்குப் பலம் கொடுத்தல், இரத்தத்திலுள்ள விஷங்களை மாற்றல் ஆகியவற்றிற்கு உபயோகமாம்.

கொட்டை:—(உஷ்ண முள்ளது) சிர ரோகங்களை நீக்கல், கண்களுக்குக் குளிர்ச்சி தருதல்.

வேப்பம் நெய்:—(வேப்பெண்ணெய்) இரணங்களை ஆற்றல், விஷக் கிருமிகளைக் கொல்லல், உஷ்ணத்தை உண்டாக்கல், கல்லீரலின் வீக்கத்தைக் குறைத்தல்.

புஷ்பம்:—(உஷ்ண முள்ளது) இரத்தசுத்தி பித்தசாந்தி.

பிசின்:—இரணத்தை ஆற்றல், மூளைக்குப் பலங்கொடுத்தல், தாது விருத்தி செய்தல்.

வேப்பங்கள்:—குஷ்ட நிவாரணம், ரசவாடையை நீக்கல், நரம்புகளுக்கு ஆண்மையைக் கொடுத்தல், தாது விருத்தி, வயிற்று இரணங்களை ஆற்றல்.

குறிப்பு:—வேப்பம் பட்டை, வேப்பங் கொட்டை, வேப்பெண்ணெய், வேப்பம் பிசின் ஆகிய இவை மருந்துக்கடைகளில் கிடைக்கும். மற்றவைகளைச் சேகரம் செய்து கொள்ளலாம்.

## ஆன்றோர் அமுதமொழிகள்.

(106-ம் பக்கத் தொடர்ச்சி.)

A. P. இராமன், B. A.

63. நல்லிணக்கமல்லது அல்லற்படுத்தும். (கொன்றை வேந்தன்.)
Alliance with the unworthy will cause mutual pain. *Konraiventhan.*

64. இணக்கமறிந்து இணங்கு. (ஆத்திசூடி.)
Make friendship with the worthy. *Authichudi.*

65. என்றும் வீடடைந்தவர் இறுமாப்பர். (வைராக்கிய சதகம்.)
While those in bliss enjoy eternal delight *Vairagyasathagam.*

66. இன்னே யருள்வீர். (ஸ்காந்தம்.)
Be gracious to me now *Skantham.*

67. ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர். (கொன்றை வேந்தன்.)
That which misers have hoarded will be carried off by the vicious *Konraiventhan.*

68. வினைக்கிடாக அனுபவமுண்டாம்.
Enjoyments and sufferings will accord with the deeds done within the periods of former births.

69. கோடரிக்காம்பு குலத்துக்கீனம். (பழமொழி.)
The handle of an axe (being of word) is enimical to its own species. *Proverb.*

70. வாழைக்குத் தானீன்ற காய் கூற்றம்.
The fruit which the plantain tree produces leads to its destruction.

71. உடம்பாடிலாதவர் வாழ்க்கை குடங்கருட் பாம்பொடு உடனுறைந் தற்று. (குறள்.)
Those who live in discord are as if enclosed in a vessel with a live snake. *Kural.*

72. உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே, இடுக்கண் களைவதா நட்பு. (குறள்.)
(Real) Friendship to one removes his distress with that promptitude with which the hands of him whose garments are loosened (while before an assembly) adjust them *Kural.*

73. கல்வியுடைமை பொருளுடைமை என்றிரண்டு, செல்வமுஞ் செல்வ மெனப்படும். (நீதிநெறி)
The two possessions, viz. Knowledge and wealth are possessions indeed *Needineri.*

74. பாலாற் கழீஇப் பலநாளுணக்கினும் வாலிதாம் பக்க மிருந்தைக் கிருந்தன்று (நாலடியார்.)
Though you wash charcoal in milk and dry it ever so long, it will not become white *Naladiyar.*

---






# கிருஷ்ணலிங் அல்லது துப்பறியும் சீடன்

(162-ம் பக்கத் தொடர்ச்சி.)

**ஆரணி. குப்புசாமி முதலியார்.**

பிறகு "நான் தவறிவிட்டேன்போ லிருக்கிறது; இங்கு தப்பிதம் ஒன்று மில்லை. படுக்கை யறையைப் பார்ப்போம்" என்று கூறிக்கொண்டே பின்பக்கமிருந்த அறைக்குச் சென்று அங்கிருந்த யாவற்றையும் சோதித்தான்.

ஆனந்தலிங் யாவும் சோதித்துவிட்டு வெளியறையில் உட்கார்ந்தான். மறுநிமிடம் இராஜவேல் மிக்க வியப்போடு விழித்துப் பார்த்துக்கொண்டே அறைக்குள் வந்தான்.

ஆனந்தலிங் ஒரு விசேஷமு மில்லாதவனைப்போலவும், அந்த விடத்திற்குத்தானே சொந்தக்காரனாயிருந்தால் அங்கு வரும் தன் நண்பனை யெப்படி வரவேற்பானோ, அதுபோலவும், சர்வ சாந்தமாய்,

"வா வா இராஜவேல்" என்றான்.

இராஜவேல் ஒன்றும் பதில் கூறாமல் ஆனந்தலிங்கை யுற்றுநோக்கினான். ஆனந்தலிங்கோ சந்தோஷத்தோடும் புன்னகையோடும்,

"என் இராஜவேல் வா உள்ளே! இங்கு உனக்காக எல்லாம் ஆயத்தம் செய்து வைத்திருக்கிறேன் பார்த்தாயா!" என்றான்.

இராஜவேல் கோபத்தை யடக்க முடியாதவனாய் "என்ன தைரியமையா உமக்கு!" என்றான்.

ஆனந்தலிங் சாந்தமாகவே "ஓ! நான் எதையும் தைரியமாய்ச் செய்வேன். அதுகிடக்கட்டும்; மனோன்மணி வீட்டை விட்டுச் சென்றபின் உனக்கு எத்தனை கடிதங்கள் வந்தன ?" என்றான். இராஜவேல் கஷ்டத்தோடு வியப்படைந்தவன் போல் அபிநயித்துக் கொண்டே "எந்தக் கடிதங்கள் ?" என்றான். ஆனந்தலிங் அஜாக்கிரதையோடேயே "அது தான் நீ முன்பு மசிபட்ட கரங்களைக் கழுகிக் கொண்டிருந்தபோது நான் உன் ஜேபியிலிருந்து எடுத்து வாசித்தேனே அது ஒன்று; அந்தக் கடிதந்தான் "அன்பார்ந்த காதலரே ஜாக்கிரதையாயிரும். துப்பறிபவர்கள் என்னைப் பின் தொடர்கிறார்கள். பணம் என்னிடமிருக்கிறது......" என்ற கருத்தடங்கிய கடிதம்" என்றான்.

இராஜவேல் இதைக்கேட்டதே சற்றுநேரம் பிரமித்து நின்று விட்டான். பிறகு அவன் முகம் சிவந்து கோபம் அதிகரித்து நாற்காலியில் சாய்ந்து கொண்டிருக்கும் துப்பறிபவனை நோக்கி "ஆ திருட்டுப்பயலே" என்று அவன்மேல் பாய்ந்தான்.

மறுவினாடி அவன் இரண்டு மணிக்கட்டுகளும் இரும்புக் கரங்களால் பிடிக்கப்பட்டவைபோல் ஆனந்தலிங்கால் பிடித்துக் கொள்ளப்பட்டன. அவன் என்ன சாமார்த்தியமும் பலமும் காட்டியும் விடுவித்துக் கொள்ள முடியவில்லை. ஆனந்தலிங் அவனைப் பிடித்துக் கொண்டே,

"திருட்டுப்பையல் என்றல்லவா கூறினுய். உண்மையாகவே நான் திருட்டுப் பயலாய்த்தானிருக்க வேண்டும். ஏனெனில் ஒரு இளங் கன்னிகை தன் வீட்டைவிட்டு ஓடிப்போவதற்கு உடந்தை யாயிருந்தவன் நான் ருன். அப்பெண் தன் தந்தை யிடமிருந்து களவாடி வந்த பணத்தில் பாகம் பெற்றுக் கொண்டவன் யார்? வாலிபனே இப்போது உன் ஜேபியிலிருக்கும் ஒரு அத்தாட்சியைக் கொண்டே நான் உன்னையுடனே கொண்டுபோய் அடைத்துவிடக்கூடும் என்ற விஷயம் உனக்குத் தெரியுமா!" என்று கூறியதும் கண்ணிமைக்குமுன் அவன் கரங்களை விட்டுவிட்டு அவன் ஜேபியிலிருந்த கடிதத்தை யெடுத்துக் கொண்டான்.

இராஜவேல் உடனே யடியற்ற மரம்போல் நாற்காலியில் சாய்ந்து மிகத் தாழ்ந்த குரலாய் "உனக்கு பிரியமானல் என்னைக் கைதுசெய்! நான் நிரபராதி. மனோன்மணியும் நிரபராதியே; அவள் அக்கடிதத்தில் அப்படி யெழுதியிருந்தால் நான் நாங்கள் நிரபராதிகளென்று சத்தியம் செய்கிறேன். இன்னும் என் பிராணனையே தருகிறேன்" என்ருன்.

ஆனந்:—உனக்குத் தெரிந்தவற்றை யெல்லாம் கூறிவிடுகிருயா ?

இராஜவேல்:—கூறமாட்டேன்.

ஆனந்தவின் பேசிக்கொண்டே பிச்சனிட மிருந்து அகப்பட்ட கடிதத்தையும் இராஜவேலிட மிருந்ததையும் ஒத்திட்டுப் பார்த்தான். சற்றுநேரங் கழித்து இராஜவேலை நோக்கி,

"சூக்ஷ்ம புத்தியுடையவனுய்த் தோன்றினும் மந்தமாகவே நடந்து கொள்கிருய். உன்போல் மந்த புத்தியுடையவனை நான் கண்டதே யில்லை. பிரக்யாதி யடையக்கூடிய சந்தர்ப்பத்தை அடியோடு போக்கடித்துவிட ஆயத்தமாய் இருக்கிருய். கடைசியில் எதற்காக ? உனக்குத் தெரிந்து இருக்கும் விஷயங்களில் எதையும் வெளியிட வேண்டாமென்று ஒரு பெண் உன்னை வேண்டிக்கொள்வதற்காக. ஓ இராஜவேல் ! மனோன்மணி நிரபராதியென்று கூறுகிருய். அப்படியிருக்க உனக்கெழுதிய ஒரு கடிதத்தில் பணம் தன்னிடதிலிருக்கிற தென்று கூறுகிருள். இன்னெரு கடிதத்தில் களவாடப்பட்ட தொகையிலிருந்தே ஒரு பத்தாயிரம் ரூபாய் உண்டியை யுனக்கனுப்புகிருள்" என்ருன்.

இராஜவேல் "அவள் என்ன எழுதினுலும் அதைப்பற்றி யெனுக்குக் கவலையில்லை. அவள் குற்றமுள்ள எதையும் செய்யமாட்டாள். ஒருக்காலும் செய்யக் கூடியவளல்ல" என்று உறுதியாய்க் கூறினன்.

ஆனந்த:—இக்கடிதத்தின் மூன் இந்த உண்டியின் மூன் அப்படிக் கூறுகிருயா ?

இராஜ:—"அப்பா துப்பறிபவரே! அவள் என் கண்முன்பாகவே அப்பணத்தை யெடுத்தாலும், அப்போதும் அவ்விடம் குற்றமான எண்ணம் சற்றும் இல்லை யென்றே நான் சத்தியம் செய்வேன்" என்ருன்.

ஆனந்:—வாலிபனே ! அவள் நிரபராதியென்ற நம்பகத்தால் எதையும் இழந்துவிட ஆயத்தமாயிருக்கும் நீ அவள்மேல் வரும் அபாண்ட குற்றத்தைச் சட்டென்று ஆராய்ச்சி செய்யாமலே ஒப்புக் கொள்வாய் இதோ இக்கடிதம் யார் எழுதியது?

இராஜ:—குமாரசாமி யெழுதியதை யவள் பார்த்து எழுதி யிருக்கிருள்.

ஆனந்:—'நான் அப்படியே நினைத்தேன். இப்போது உன் அறிவைக் கொஞ்சம் தீட்சண்யமாக்கிக் கொண்டு இந்த இரண்டு கடிதங்களையும்

ஒத்திட்டுப்பார். முக்கியமாய் க, மு, தே இந்த எழுத்துக்களை நன்ருய்ப் பார்'' என்ருன்.

இராஜவேல் இதில் என்ன விபரீதம் வெளிப்படுமோ என்ற சந்தேகத்தோடு நிதானமாய்ச் சற்றுநேரம் இரண்டு கடிதங்களையும் உன்னிப்பாய்ப் பார்த்துவிட்டு,

''அய்யோ கடவுளே! இக்கடிதங்கள் கள்ளக் கையொப்பமிடப் பட்ட கடிதங்கள்! நான் முன்னமே யிதைக் கண்டறிந்து கொள்ளாமல் மூடனுய் விட்டேனே. அவள் இப்படிப்பட்டவளென்று சற்றேனும் கருத நான் என்ன பெரியதுரோகியா யல்லவோ இருந்து விட்டேன். ஆயினும்-ஆயினும் என்ருன்.

ஆனந்த:—ஆயினும் என்ன?

இராஜ:—ஒன்றுமில்லை ஒன்றுமில்லை

ஆனந்த:—''என்னமோ இருக்கிறது. என்னை நம்பி அதைக்கூறு. வீணுய் இருக்கும் காலத்தைப் போக்கடிக்காதே. உன்னிடமிருந்து அதை வெளிக்குக் கொண்டுவர என்னுல் முடியாதென்று நினைக்காதே கூறு சீக்கிரம்'' என்ருன்.

இராஜ:—''இக்கடிதத்தில் கண்டபடி நான் அவளைச் சந்திக்கச் சென்றேன். அவள் வீதியின் மூலையில் எனக்காகக் காத்துக் கொண்டிருந்தாள். ஆனல் சுமார் நூறு கெஜதூரத்தில் என்னைக் கண்டதே மூக்கின்மேல் விரல்வைத்துப் ''பேசாமலிரு'' என்று சமிக்கை செய்துவிட்டுத் திடீரென்று ஓட்டம் பிடித்து விட்டாள். பிறகு ஒரு மனிதன் அவசரத்தோடு வந்து சுற்று முற்றும் பார்த்ததைக் கண்டேன். நான் அவன் ஒரு துப்பறியவன் என்று கருதி அவள் பின்னல் செல்ல முடியவில்லை. ஆயினும் அதற்குள் அவள் என் கண்களுக்குப் புலப்படாத தூரம் போய் விட்டாள். அதன் பிறகு இரகசியத்தை வெளியிட வேண்டாமென்று எழுதிய கடிதம் வந்தது'' என்ருன்.

ஆனந்த:—நீ பார்த்தது மனோன்மணியே என்று நிச்சயமாய்த் தெரியுமா?

இராஜ:—அப்போதும் நிச்சயமென்றே தெரியும். இப்போதும் சந்தேகப்பட ஒரு காரணமுமில்லை.

## நாடக இரங்கற்பா.

நாடகமே நினதியற்கை நன்கறியார் வயப்பட்டுக்
கேடனைத்து நீயடைந்தாய் கீதமொடு தமிழில்வரு
பாடல்களின் பொற்பழித்தாய் பாமரர்கைப் புடையுண்டாய்
தேடரிய சரிதைகளின் சீர்கெடுத்துத் திகழ்ந்தனையே!

இனிமையுறப் பாடிநடித் திசைபெறுவார் தமையிங்கு
நனிகடிந்து நீக்கியந்தோ நடிக்குமியல் புணராத
மனிதரையே கொண்டெங்கும் மயங்கியுயர் வொழிந்தனையே
இனியுனது திருநலங்கண் டின்புறுநா ளென்றேயோ!

சேம்பியன்.

# பொது வர்த்தமானம்.

**இந்தியாவின் வறுமை:**—அடியிற் குறிப்பிடப்படும் புள்ளி விபரங்கள் செப்டெம்பர் மாத "மாடர்ன் ரிவியூ" வில் அசோக சட்டர்ஜீ அவர்களால் எடுத்துக் காட்டப்பட்டவையாகும்.

| கணக்கெடுத்தவர் பெயர். | வருஷம் | சராசரி வருஷ வருவாய் ரூ. அ. ப. |
|---|---|---|
| தாதாபாய் நௌரோஜீ | 1870 | 20—0—0 |
| பாரிங்-பார்பர் | 1882 | 27—0—0 |
| டிக்பை | 1898—99 | 18—9—0 |
| டிக்பை | 1900 | 17—4—0 |
| லார்டு கர்சன் | 1901 | 30—0—0 |
| பிண்ட்லேஷிராஸ் | 1911 | 50—0—0 |
| பி. என். சர்மா (ஸ்டேட் கவுன்ஸிலில் எடுத்துக் காட்டியது) | 1911 | 86—0—0 |
| கே. டி. ஷா | 1921—22 | 46—0—0 |

* * *

**ஜே. சி. போஸின் அற்புதச்செயல்:**—உலகம் போற்றும் விஞ்ஞான சாஸ்திரி ஜகதீச சந்திரபோஸ் அவர்கள் ஓரிடத்தில் ஒரு தவளைக்கும், தக்காளிச் செடிக்கும் விஷம் கொடுத்துக் கொன்றுவிட்டு மறுபடியும் உயிர் கொடுத்தாராம்.

* * *

**மாணவர்களை எழுதப் பழக்கும் நவீன முறை:**—பிரம்பு முதலியவற்றைக்கொண்டு அடித்துப் பயமுறுத்திமாத்திரம் சிறுவர்களைச் சரியாக எழுதும்படிச் செய்ய முடியாதாதலால் அதற்கென ஒரு புதிய மின்சார இயந்திரம் கேம்பிரிட்ஜ் பள்ளிக்கூடமொன்றில் உபயோகிக்கப்படுகிறது. ஒரு பையன் எழுதவேண்டிய இடத்தைவிட்டுக் காகிதத்தின் மற்றப்பாகங்களில் பேனாவை வைத்தால் "பஸ்" என்ற சப்தம் உண்டாகுமாம். கோணலாக எழுதினால் இயந்திரத்தில் ஒருமணி அடிக்குமாம். பேனாவை அழுத்திப் பிடித்தெழுதினால் கழுத்தில் மின்சார அதிர்ச்சி யுண்டாகுமாம். இந்த இயந்திரத்தை 6 மாதம் உபயோகப்படுத்தியபிறகு அந்தப் பையன் நன்றாகவும் சுலபமாகவும் எழுத ஆரம்பிக்கிறானாம்.

* * *

**குண்டுபோட்டு மழையைத் தடுத்தல்:**—மேனாட்டில் விஞ்ஞான சாஸ்திரிகள் அதிவிருஷ்டியைத் (தேவையில்லாத அதிக மழையை) தடுக்கப் புதிய முறையைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். பிரான்கோ—ஸ்விஸ் எல்லைப் பிரதேசத்தில் ஓரிடத்தில் இடியோடுகூடிய பெரும்புயலைத் தடுக்க 2 மணி நேரம் ஆகாயத்தில் குண்டுகள் போடப்பட்டனவாம். இப்படிப் புயலைத் தடுத்ததால் பெரிய நஷ்டத்திற் குட்பட விருந்த திராக்ஷைத் தோட்டங்கள் காப்பாற்றப்பட்டனவென்றும் இந்த குண்டுப் பிரயோகம் செய்யப்பெறாத பக்கத்து ஜில்லாக்களில் நூற்றுக்கு 50 வீதம் திராக்ஷைத்தோட்டங்கள் நாசமடைந்தனவென்றும் ஒரு செய்தி கூறுகிறது. மேனாட்டின் இந்தப் புதிய முறை நமது கிராமாந்தரங்களில் கொள்ளியைக் காட்டி வீசினால் மழை நின்றுவிடும் என்றுள்ள ஐதிகத்தை ஞாபகப்படுத்தவில்லையா?

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**விபவஹு கார்த்திகைமீ—கலியுகாதி 5030, சாலிவாகனம் 1851,**
**பசலி 1338—கொல்லமாண்டு 1104—ஹிஜரி 1347**
**இங்கிலீஷ் 1928ஹு நவம்பர்மீ—டிசம்பர்மீ**

| கார்த்திகை | நவம்பர் | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | வெ | சது48-40 | மூல17-30 | அ17-30சி | கரிநாள் |
| 2 | 17 | சனி | பஞ்54-15 | பூரா24-35 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 3 | 18 | ஞா | சஷ்58-30 | உத்30-45 | அமி60 | கந்தர் சஷ்டி, சூர சம்மாரம் |
| 4 | 19 | திங் | சப்60 | திரு35-33 | அ35-33சி | திருதினஸ்பிருக், கரிநாள் |
| 5 | 20 | செவ் | சப்1-13 | அவி38-33 | சி38-33ம | வியாதியஸ்தர் குளிக்க |
| 6 | 21 | புத | அஷ்2-8 | சதை39-53 | சி39-53அ | கோவாஷ்டமி |
| 7 | 22 | வியா | நவ1-3 தச58 | பூரட்38-58 | சித்60 | அவமாகம், தனுராயனம் நா-30-38 |
| 8 | 23 | வெ | ஏகா53-3 | உத்36-20 | சி36-20அ | ஸ்மார்த்த ஏகாதசி |
| 9 | 24 | சனி | து46-33 | ரேவ32-3 | ம32-3சி | வைஷ்ணவ ஏகாதசி |
| 10 | 25 | ஞா | திர38-48 | அஸ்26-23 | சித்60 | கரிநாள், பிரதோஷம் |
| 11 | 26 | திங் | சது30-5 | பரணி19-33 | சி19-33ம | கிருத்திகை, அண்ணாமலை தீபம் |
| 12 | 27 | செவ் | ○20-45 | கிரு※12-13 | சி12-13அ | பௌ○, பாஞ்சராத்திர தீபம், விஷ்ணுதீபம் |
| 13 | 28 | புத | பிர11-20 | ரோ4-38 மிரு57-25 | சித்60 | கார்த்திகபகுளம், அவமா |
| 14 | 29 | வியா | துதி2-20 திரி56-33 | திரு50-48 | ம50-48அ | |
| 15 | 30 | வெ | சது46-45 | புன45-20 | சி45-20ம | |
| 16 | டிசம்பர் 1 | சனி | பஞ்40-55 | பூசம்41-15 | சி41-15ம | |
| 17 | 2 | ஞா | சஷ்36-48 | ஆயி38-53 | சி-38-53ம | |
| 18 | 3 | திங் | சப்34-38 | மகம்38-28 | ம38-28சி | |
| 19 | 4 | செ | அ34-25 | பூரம்39-50 | சி39-50அ | |
| 20 | 5 | புத | நவ36-5 | உத்43-10 | அ43-10ம | |
| 21 | 6 | வியா | தச39-40 | அஸ்47-58 | சித்60 | |
| 22 | 7 | வெ | ஏகா44-30 | சித்54-10 | சித்60 | சர்வ, மத்வ, ஏகாதசி |
| 23 | 8 | சனி | து50-23 | சுவா60 | அமி60 | திருதினஸ்பிருக் |
| 24 | 9 | ஞா | திர56-53 | சுவா1-13 | சி1-13ம | பிரதோஷம் யமதீபா |
| 25 | 10 | திங் | சது60 | விசா8-53 | ம8-53சி | மாச சிவராத்திரி |
| 26 | 11 | செவ் | ச●3-40 | அனு16-43 | சி16-43ம | சர்வத்திர அமாவாசை |
| 27 | 12 | புத | அ10-28 | கேட்24-35 | சி24-35ம | குளம் கிணறு வெட்ட |
| 28 | 13 | வியா | பிர16-58 | மூல31-58 | சித்60 | மார்க்கசிரசுத்தம் |
| 29 | 14 | வெ | து22-55 | பூரா38-53 | பி38-53சி | தனுசுரவி நாழி, 54-31, மூலகார்த்தி-நாழி-54-31 |

| | | | |
|---|---|---|---|
| | குரு | ராகு | செ |
| | 11உ-விரு-புத<br>20,,-மகர-சுக் | | |
| சுக் | கே-சூ<br>சனி | புத | |

**PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,**
**AT THE " ANANDA BODHINI" POWER PRESS,**
**15, VENKATESA MAISTRY ST., MADRAS.**